உதயமானவுடனே அங்கிருந்து ப்ரயாணமாய்ச் சென்றனர். பெரும் புகழ் பொருந்திய அந்த ராமாதிகள் மிகவும் பெரிதாகிய அரண்யத்திற்குள் நுழைந்து ஆங்காங்கு இதுவரையில் என்றும் பாராத நாநாவித ப்ரதேசங்களைப் பார்த்துக்கொண்டே சென்று யமுனை கங்காநதியுடன் கலக்குமிடத்திற்குப் போய்ச் சேர்ந்தனர். அந்த ராமன் கஷ்டம் உண்டாகாதிருக்கும்படி நல்ல வழியைப் பிடித்துப் பலவகை வ்ருக்ஷங்களைப் பார்த்துக்கொண்டே நடந்து சென்று பொழுது திரும்புகையில், லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! ப்ரயாக க்ஷேத்ரத்திற்கு நாற்புறத்திலும் பகவானாகிய அக்னிதேவனுக்கு த்வஜம் போன்ற புகையானது உயர எழும்பி வருகின்றது, பார். ஆகையால் பரத்வாஜமஹர்ஷி அருகிற்றானே இருக்கிறாரென்று தோற்றுகின்றது. நாம் நிச்சயமாக இப்பொழுது கங்கா யமுனைகளின ஸங்கமஸ்தானமாகிய ப்ரயாக க்ஷேத்ரத்திற்கு வநதுவிட்டனம். ஜலங்கள் ஒன்றோடொன்று மோதிக்கொள்வதனால உண்டாகும் ஒலியும் காதுக்குப் புலப்படுகின்றது; கேள். காட்டிலுண்டாகிற காய் கிழங்குகள் காஷ்டங்கள் முதலியவற்றால் ஜீவித்துக் கொண்டிருப்பவர் வெட்டி உலர்த்தியிருக்கும் காஷ்டஙகள் எங்கும் புலப்படுகின்றன. இதோ பரத்வாஜாஶ்ரமத்திலுள்ள நாநாவித வ்ருக்ஷங்களும் காணப்படுகின்றன' என்றனன. அனநதரம அவவில்லாளிகள் இருவரும ஸுகமாக வழிநடந்து ஸூர்யன அஸ்தமிப்பதற்குள்ளாகவேகங்காயமுனா ஸங்கமமாகிய ப்ரயாக க்ஷேத்ரத்திலிருக்கும் பரத்வாஜாஶ்ரமத்திற்கு அருகிலுளள வனப்ரதேசங்களுக்குப் போய்ச் சேர்ந்தனர். பிறகு ராமன் ஆஶ்ரமத்திற்குள் நுழைந்து தனது அபூர்வாகாரத்தைக கண்டு ம்ருகங்களும் பக்ஷிகளும் பயநது நிற்கும்படி ஒரு முஹூர்த்தகாலம்

நடந்து சென்று பரத்வாஜமாமுனியின் ஸமீபத்திற்குப் போய்ச் சேர்ந்தனன். அனந்தரம் வீரர்களாகிய அவ்விரு வரும் ஸீதை பின்றொடர்ந்து வரப்பெற்று ஆஶ்ரமத்திற் குப்போய்ச் சேர்ந்து பரத்வாஜமாமுனியைப் பார்க்க விரும்பி ஸாயங்காலமாகையால் ரிஷி அக்னிஹோத்ரம் முதலிய கார்யங்களை முடித்துக்கொண்டு வெளி வருவதை எதிர் பார்த்துக்கொண்டு தூரத்தில் இருந்தனர். அம் மாமுனிவர், உக்ரமான தபோநியமமுடையவர்; த்யானத் தில் மிகுந்த மனவூக்கமுடையவர்; தபோபலத்தினால் ஞானக்கண் உண்டாகப் பெற்றவர். அம்மஹாநுபாவர் ஹோமத்தை முடித்து சிஷ்யர்கள் கும்பல் கும்பலாய் நாற்புறமும் சூழ்ந்திருக்கப் பெற்று, வெளியே வருகையில், ராமன கண்டு கைகளைக் குவித்துககொண்டு ஸீதையும் லக்ஷ்மணனும் தானுமாக நமஸ்காரஞ் செய்தனன். ராமன அம்முனிவரைப் பார்த்து மஹாநுபாவரே! நாங்கள் தசரதசக்ரவர்த்தியின் புதல்வர்கள். ராமலக்ஷ்மணர்களென னும பேருடையவர்கள். மங்கல நடத்தையுள்ள இம்மடந்தை என் பார்யை. இவள் ஸீதையென்னும் பேர்பூண்டவள். விதேஹனென்னும் ஜனகராஜன் புதல்வி. இவள் நிந்தைக்கிடமில்லாத குணங்கள் அமையப் பெற்றவளும் அழகிய சீலம் பொருந்தியவளுமா யிருப்பவளாகையால் ஜனஸஞ்சாரமில்லாத வனத்திற்கு என்னைப் பின்றொடர்ந்து வந்தனள். வ்ரதங்களில்மிக்க மனவூக்க முடையவனும் எனது அருமைத் தம்பியுமாகிய இந்த லக்ஷ்மணனும், நான் தந்தையின் ஆஜ்ஞைப்படி வனத்திற்குப் புறப்பட்டு வருகையில், தானும் அவ்வனத்திற்கே என்னைப் பின்றொடர்ந்து வந்தனன். மஹாநுபாவனே! நாங்கள் தந்தையின் கட்டளைப்படி தபோவனத்திற்குப் போகின்றனம். அந்தத் தபோவனத்தில் காய் கிழங்குகளைத் தின்று பித்

ருவசனபரிபாலனஞ் செய்துகொண்டு தர்மத்தையே ஆச ரிக்கப் போகின்றனம்' என்று இங்ஙனம் உரைத்துத் தமது வருத்தாந்தத்தை அறிவித்தனன். தார்மிகராகிய அம்முனிவர், புத்திமானாகிய அந்த ராஜகுமாரன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, பிறகு மதுபர்க்கத்திற்காக [1] எருதையும் பூஜாவிதிக்காக அர்க்யஜலத்தையும் கொண்டு வந்தனன். மேலும், அம்முனிவர் வனத்தில விளைகின்ற காய்கிழங்குகளால் செய்யப்பட்டவைகளும் நானாவித ரஸம் அமைந்தவைகளுமாகிய அன்ன விசேஷங்களைக் கொடுத்து அவர்கள் படுக்கும் பொருட்டு வாஸஸ்தானத்தையும் ஏற்படுத்திக் கொடுத்தனர். அம்முனிவரும் தன்னைச் சுற்றிப் பக்ஷிகளும் [2] ம்ருகங்களும் சூழ்ந்திருக்கப் பெற்று முனிவர்களுடன்கூடி, ராமனவரக்கண்டு அவனைப் பூஜித்து ஸ்வாகதம் விசாரித்தனன். ராமனும் அம்முனிவர் செய்த பூஜையைப் பரிக்ரஹித்து உட்கார்ந்து கொண்டிருக்கையில, அப்பொழுது பரத்வாஜர் தர்மம் நிறைந்திருக்கும்படி 'ராமா! வெகு காலங் கழித்து நீ இவவிடம் வருகையில், நான் உன்னைப் பார்க்கப பெற்றனன். உன்னை நிஷ்காரணமாக அரண்யத்திற்கு அனுப்பின விஷயத்தையுங் கேள்விப்பட்டேன். மஹாநதிகளாகிய

1 'மோமயபர்க்காஹோ வேஹாயீயாயீ ஆசாாய ருதவிக ஸ்நாதகோ ராஜாவா யர்மயுக்தஃ' என்று எருது மதுபாக்கத்திற்கு அங்கமென்று ஸம்ருதியிற் சொலலப்பட்டது.

2 இதற்கு 'ம்ருமபக்ஷிபிராவீதோ முநிபிஸ்ச பரந்தபஃ' என்று மூலம் 'முனிவருடைய வைபவத்தைப் பற்றித் திர்யகஜாதிகளுங்கூட ரிஷிகளோடு ஸமானமாக அம்முனிவரிடத்தில் விஸ்வாஸமுண்டாகப் பெற்று அவரை ஸேவித்துக் கொண்டிருந்தன' என்று கோவிந்தராஜர். 'முனியின் ப்ரபாவத்தினல் திர்யக்ஜாதிகளாயிருந்தும் ராமனை ஈஸ்வரனென்று நினைத்து முனிவர்களோடு ஸமானமாக அவனை ஸேவித்துக் கொண்டிருந்தன' என்று மஹேஸ்வர தீர்த்தர்.

இக் கங்கா யமுனைகள் ஒன்று சேரும் ப்ரதேசம் ஏகாந்த மாயிருக்கின்றது; மேலும், புண்யத்தைக் கொடுப்பதும் அழகியதுமாயிருக்கின்றது ஆகையால் நீ இங்கு ஸுக மாயிருப்பாயாக' என்றனன். ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஹிதஞ் செய்வதில் மிகுந்த மனவூக்க முடையவராகிய பரத்வாஜமஹர்ஷி சொல்லிய வார்த்தைகளைக் கேட்டு ராமன் அழகிய சொற்களுடன் அம்முனியைப் பார்த்து [1]'மஹானுபாவரே! இவ்விடம் பட்டணத்து ஜனங்களுக்

---

1 இதற்கு மூலம்—'பகவந்நித ஆஸந்ந: பௌரஜாநபதோ ஜந:, ஸுதர்சமிஹ மாம் ப்ரேக்ஷ்ய மந்யேஹமிமமாச்ரமம். ஆகமிஷ்யதி வைதேஹீம் மாஞ்சாபி ப்ரேக்ஷகோ ஜந:,அநேந காரணேநாஹமிஹ வாஸந்நரோசயே. ஏகாந்தே பச்ய பகவந்நாச்ரமஸ்தாநமுத்தமம்,ரமேதயத்ரவைதேஹீ ஸுகார்ஹா ஜநகாத்மஜா' இதற்கு ரஹஸ்யார்த்தம்—(பகவந்) ஸர்வஜ்ஞராகிய பரத்வாஜரே! ராவண வதத்தின் பொருட்டு ரஹஸ்யமாக அவதரித்திருக்கிற என்னை இப்படி வெளிப்படுத்துவீராயின்,அப்பொழுது (பௌரஜாநபதோ ஜந:)பட்டணத்திலுள்ள ஜனங்களும் நாட்டுப்புறத்து ஜனங்களும் (மாம்) என்னை. (ஸுதர்சம்) 'விஷ்ணுஞ்ச த்ருச்யதே த்வசீர்யயா' என்று ச்ருதியால பார்க்கத்தக்க விஷ்ணுவாகவும்,(வைதேஹீம்) ஸீதையை, (மாம் ச) லக்ஷ்மியாகவும், தெரிந்துகொண்டு, (ப்ரேக்ஷக:) பார்க்க விரும்பினவர்களாக, (இஹ ஆகமிஷ்யதி) இவ்விடம் வருவார்கள். (அநேந காரணேந) இந்தக் காரணத்தைப்பற்றி, (வாஸம்) இங்கு வெளிப்பட வாஸஞ் செய்வதை, (ந ரோசயே) விரும்பப் பொறேன். ஆகையால் (யத்ர) எதில், பரமானந்தஸ்வரூபியாகிய எந்த என்னிடத்திலென்றபடி. (வைதேஹீ) ஸீதை, (ரமதே) 'யோ ம்ருக்ஷியதே ஹஸ்தத்ருஹீத பத்மயா ச்ரியேதரைரங்க விம்ருக்ஷியமாணயா' (ஓய்! பிறர் தேடும்படியான வைபவம் அமைந்தவளும் ஹஸ்தத்தில் தாமரைபுஷ்பத்தைத் தரித்திருப்பவளுமாகிய ஸ்ரீதேவியால யாவன் தேடப்படுகின்றானோ) என்று ஸர்வஜனங்களுக்கும் ஆச்ரயிக்கத் தக்கவளாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மியுங்கூட என்னை இரவும் பகலும் ஒழிவின்றி அனுபவித்துக் கொண்டிருந்தபோதிலும், அப்பொழுதே புதிதாக

கும் பள்ளிப்பட்டு ஜனங்களுக்கும் ஸமீபமாயிருக்கின்றது. ஆகையால் ஸீதையையும் என்னையும் பார்க்க விரும்புகிற ஜனங்கள் இங்கு என்னை ஸுகமாகப்பார்க்க முடியுமென்று தெரிந்துகொண்டு எங்களைப்பார்க்கிறதற்காக இவ்வாஶ்ரமத்திற்கு வருவார்களென்று நினைக்கின்றனன். இந்தக் காரணத்தைப் பற்றி எனக்கு இங்கிருப்பது இஷ்டப்படவில்லை. ஆகையால் ஜனங்களில் ஒருவர்க்கும் தெரியக்கூடாத ஏகாந்தஸ்தலத்தில் எங்காயினும், ஜனகராஜபுத்ரியாகிய ஸீதை ஸுகத்தையே அனுபவிக்கத் தகுந்தவளாகையால் அவள் ஸுகமாக விளையாடிக் கொண்டிருக்கும்படிக்கு உத்தமமாகிய ஓராஶ்ரம ப்ரதேசத்தை ஆலோசித்துச் சொல்லவேண்டும்' என்றனன். அந்த பரத்வாஜ முனிவரும் ராமன் மொழிந்த சுபவசனங்களைக் கேட்டு, உடனே அவனைப் பார்த்து மிகுந்த பொருளடக்கமுள்ள உரைகளை உரைக்கத் தொடங்கி 'அப்பனே! இவ்வாஶ்ரமத்திற்குப் பத்து கூப்பிடு தூரத்தில் மஹர்ஷிகள் வாஸஞ் செய்யப் பெற்றதும் பரிசுத்தமுமாகிய சித்ரகூடமென்னும் ஓர் பர்வதம் இருக்கின்றது. அது நாற்

---

அனுபவிக்க ஆரம்பித்தாற்போல இடைவிடாத அனுராகம் உண்டாயிருக்கப் பெற்றிருப்பாளோ; அப்படிப்பட்டவனும, (ஆஶ்ரமஸ்தாநம்) 'ஆஶ்ரீயதே இத்யாஶ்ரமம' என்கிற வ்யுத்பத்தியால் 'ஆஶ்ரமம்' என்றுல ஜகத்தைச சொல்லுகிறது; ஜகததுக்கு (ஸ்தாநம்) ஆதாரமாயிருப்பவனும், (உத்தமம்) ஸ்வரூபகுணவிபூதிகளில் ப்ரஹ்மருத்ராதிகளிற் காட்டிலும் மிக்க மேலாயிருப்பவனுமாகிய என்னை, அதிப்ரியராயிருக்கிற நீரொருவரே, (ஏகாந்தே பஶ்ய) ஏகாந்தத்தில கண்டு களிப்பீராக. 'குஹ்யாத் குஹ்யதமம்' என்கிறபடியே மிகவும் ரஹஸ்யமாகிய என் ஸ்வரூபத்தை வெளிப்படுத்த வேண்டாம். என்று ரஹஸ்யோபதேசமென்று மஹேஶ்வரதீர்த்தர்.

புறத்திலும பார்க்க அற்புதமா யிருக்கும். [1] அதில் கொண்டை முயல்களும் குரங்குகளும் கரடிகளும் வெகுவா யிருக்கும். அது கந்தமாதன பர்வதத்தை நிகர்த்திருக்கும். அந்தப் பர்வதத்தில் நீ வாஸஞ் செய்யலாகும். மனுஷ்யன் எப்பொழுது சித்ரகூட பாவத சிகரங்களைப் பார்ப்பானோ. அப்பொழுதே அவனுக்குப் பாபத்தில் மனஞ் செல்லாது. மங்கள கார்யங்களிலேயே புத்தி சென்று கொண்டிருக்கும். [2] அந்தச சித்ரகூட பர்வதத்தில் பல ரிஷிகளும பல நூறுஸம்வத்ஸரங்கள் விளையாடுவதுபோல்

1 இதற்கு—'கோலாங்கூலாநுசரிதோ வாநரர்க்ஷ நிஷேவித꞉। சித்ரகூட இதி க்யாதோ கந்தமாதநஸந்நிப꞉' என்று மூலம். வருங்காலம் நிகழ்காலம கழிகாலமாகிய மூன்று காலங்களையும் அறிந்த மஹர்ஷி 'கோலாங்கூலாநுசரிதோ வாநரர்க்ஷ நிஷேவித꞉' என்று கொண்டை முயலகளும், குரங்குகளும கரடிகளும் ஆகிய மூன்றையுஞ் சொன்னதல்ல அவவிதமானவாகளே ராமனுக்கு ஸஹாயமாவாரகளென்று ஸூசிப்பித்தாரென்று தெரிகின்றது.

2 இதற்கு மூலம—'ருஷயஸ்தத்ர பஹவோ விஹ்ருத்ய ஶரதாம் ஶதம்। தபஸா திவமாரூடா꞉ கபாலஶிரஸா ஸஹ' இங்கு 'கபாலஶிரஸா என்னும் இந்தப பதத்திற்குப் பலவிதமாகப் பொருள கூறுகின்றனா. அதில ஒரு விதம் மூலத்தில் சொலலப்பட்டது. மற்றை விதங்களாவன—(கபாலஶிரஸா) என்பது சரீரம் முழுவதையுங காட்டுகிறது சரீரத்தோடு கூடவே ஸ்வாகக்ஞ் சென்றார்களென்றபடி. அல்லது—(கபாலஶிரஸா) கபாலசிரஸ்ஸென்னும் ஒரு ரிஷி உளர், அவருடன் கூட மற்றவரும் ஸவர்ககஞ் சென்றார்களென்று பொருள. அல்லது (ஶரீரேண) என்னும பதத்தைக் கூட்டிக்கொண்டு (கபாலஶிரஸா ஶரீரேண) கபாலசிரஸஸுடன் கூடிய சரீரத்தோடு கூடவே யென்று பொருள. கபாலஶிரஸ்ஸாவது கபாலந் திடமாயிருக்கப் பெற்ற சிரஸ்ஸு. கபாலம்—மண்டையோடு. அலலது—(கபாலஶிரஸா) என்று (தபஸா) எனபதறகு விசேஷணமாக்கி, சிரககபாலம் மிகுந்திருக்கும்படி சரீரத்தை உலாத்திக் கடுமையாக நடத்தின தவத்தின் மஹிமையால ஸ்வாக்க லோகஞ் சென்றார்களென்று பொருள.

ஸுகமாகத் தவஞ் செலுத்தி. அந்தத் தவத்தின் மஹிமையாலும் இடைவிடாமல் கபாலனைஞ் செய்வதனுலும் தலை மயிர்களும் சரீரத்தின் தோல்களும விட்டுபெற்றுக் கபால மாத்ரம் மிகுந்திருக்கப் பெற்று அந்தச் சரீரத்துடனே ஸ்வர்க்கலோகம் போய்ச் சேர்ந்தனர். ராமா! அது மிகவும ஏகாந்தமாயிருக்கும். நீ அங்கு ஸுகமாக வாஸஞ் செய்யலாகுமென்று தோற்றுகின்றது. இப்படி இல்லையாயின், இங்காவது என்னேடுகூட வஸித்திருந்து உனது வனவாஸ நியமத்தைத் தீர்த்துக் கொள்வாயாக' என்றனர். அந்தப் பரத்வாஜ மஹர்ஷி தர்மங்களை அறிந்தவராகையால், ராமனுக்கும ஸீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் அதிதிகளுக்குச் செய்யவேண்டிய ஸத்காரங்களை நடத்தி உபசரித்தனர். இங்ஙனம், ப்ரயாக க்ஷேத்ரத்தில வாஸஞ் செய்கின்ற அந்தப் பரத்வாஜமஹர்ஷியிடஞ் சென்று பணிந்து அவர் செய்த ஸத்காரங்களையும் பெற்று அம் மஹர்ஷியின அருகில உட்கார்ந்து அற்புதங்களாகிய கதைகளைச் சொல்லிக்கொண்டிருக்கையில், பரிசுத்தமாகிய ராத்ரி வந்தது. ஸுகானுபவத்திற்கே உரியவர்களாகிய ஸீதா ராம லக்ஷ்மணர்கள் மூவரும் ஸ்ரமந் தீரப் படுத்துக்கொண்டு அன்றிரவெல்லாம் அழகியதாகிய அந்தப் பரத்வாஜமஹர்ஷியின ஆஸ்ரமத்திலேயே ஸுகமாக வஸித்திருந்தனர். உதயமானவுடன புருஷ சிகாமணியாகிய ராமன், ப்ரஹ்மதேஜஸ்ஸுடன ப்ரகாசித்துக்கொண்டிருக்கின்ற பரத்வாஜ முனிவரிடம் வந்து அம்முனியைப் பார்த்து 'ஸத்ய சீலரே! மஹானுபாவா! நாங்கள் இன்றிரவெல்லாம இவ்வாஸ்ரமத்தில வஸித்திருந்தோமன்றோ? இனி நீர் அருளிச் செய்த வாஸஸ்தானத்திற்குப் போகின்றனம். அனுஜ்ஞை கொடுப்பீராக' என்றனன். அந்தப் பரத்வாஜரும் உதயமானது கண்டு ராமனைப் பார்

த்து 'தேனும் காய் கிழங்குகளும் சித்ரகூடபர்வதத்தில் வெகுவாயிருக்கின்றன. ஆகையால் நீ அவவிடம் போவாயாக. மிகுந்த பலமுடையவனே! அது உனக்கு யுக்தமான வாஸஸ்தானமென்று நினைக்கிறேன். அதில் நானாவித வருக்ஷங்கள் நிறைநதிருக்கின்றன. கின்னரர்களும் உரகர்களும் அவ்விடத்திற்கு வருவார்கள். மயில்களின் கேகா சப்தங்கள் அங்கு நாற்புறத்திலும் செவிப்பட்டுக்கொண்டிருக்கும். மேலான யானைகளும் அங்கு அழகாய்ப் புலப்பட்டுககொண்டிருக்கும். அங்ஙனம் பரிசுத்தியுள்ளதும் ரமணீயமாயிருப்பதும் பழங்களும் கிழங்குகளும் காய்களும் ஏராளமாயிருக்கப் பெற்றதுமாகி எங்கும் புகழ் பெற்று விளங்குகின்ற அந்தச் சித்ரகூடபர்வதத்திற்குப் போகலாம்; ராமா! அழகாயிருக்கின்ற அப்பர்வதத்தின வனமத்யபரதேசங்களில யானைகளும் மானகளும் குவியல்குவியலாக ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும. நீ அவைகளைப் பார்த்து ஸுகமாகப் பொழுது போக்கலாம். அங்கு ஆறுகளும் மலையருவிகளும் மலைச்சாரல்களும் கற்கள் ஒன்றோடொன்று சேர்நது நெருக்கமான அழகிய ஸந்துகளும், குகைகளும் கற்கள் வெடித்து விசாலமான ப்ரதேசங்களும் ஸீதையுடன் கூடிப் பார்த்துக்கொண்டே ஸஞ்சரிக்கிற உனக்கு மிகக மனக்களிப்பைக கொடுக்கும். அங்கு சிறு குருவிகளும் குயிலகளும் களித்துக் கலகலவென்று குலாவிககொணடிருககும. பற்பல மான்களும் யானைகளும மதித்து அழகாய உலாவிக கொண்டிருக்கும். இங்ஙனம் மஙகலகரமாகிய அநதச் சித்ரகூடபர்வதத்திற்குச் சென்று அங்கு ஓராஶ்ரமம் ஏற்படுத்திக் கொண்டு ஸுகமாயிருபபாயாக' எனறனர். ஐம்பத்து நானகாவது ஸர்க்கம முற்றிறறு.

---

{ சித்ரகூடத்திற்கு ப்ரயாணமானதும், ஓட மேறி யமுனாநதியைத் தாண்டி அன்று ஸாயங்காலம் யமுநா வனத்தில் வஸித்திருந்ததும், }

பகைவரை அடக்கும் பராக்ரமசாலிகளாகிய அந்த ராஜகுமாரர்கள் அன்றிரவு அம்முனிவரின் ஆஸ்ரமத்தில் இருந்து உதயமானவுடன் அம்மஹர்ஷிக்கு நமஸ்காரஞ் செய்து சித்ராகூடத்தைக் குறித்துப் போயினர். அம்மஹர்ஷியும் அவர்களுக்கு மங்களாசீர் வசனங்களை நடத்தினர். அங்ஙனம் அவர்கள் ப்ரயாணமாய்ப் போவதைக் கண்டு, தந்தை பிள்ளைகளைப் பின்றொடர்வதுபோல், தானும் அவர்களைப் பின்றொடர்ந்து சென்றனர். பிறகு மஹாதேஜஸ்வியாகிய அம்முனிமன்னவர் பயங்கரமான பராக்ரமம் பொருந்திய ராமலக்ஷ்மணர்களைப் பார்த்து "புருஷ ஸ்ரேஷ்டர்களே! நீங்கள் கங்காயமுனைகள் கலக்குமிடமாகிய ப்ரயாக க்ஷேத்ரத்திற்குச்சென்று, அங்கு கங்காஜலம் மோதுவதனால் திரும்பிக் கொஞ்சம் மேற்கு முகமாகப் பாய்கின்ற யமுனையை அனுஸரித்துப் போவீர்களாக. ரகுவம்சத்திற் பிறந்த மஹானுபாவர்களே! யமுனாநதி வேகமாகப் பாய்ந்துகொண்டிருக்கும் ஸ்தலத்திற்குச் சென்று, அங்கு அனாதியாக ஜனங்கள் எப்பொழுதும் தாண்டிப் போகுந் துறைக்குப் போய், தெப்பங் கட்டிக் கொண்டு அந்நதியைத் தாண்டவேண்டும். பிறகு அந்நதியின் அக்கரையில் பச்சை வர்ணம் பொருந்திய இலைகளுடையதும், தன்னைச் சுற்றிப் பல வ்ருக்ஷங்களோடு வளர்ந்து வருவதும், ஸித்தர்கள் வந்திருக்கப் பெற்றதுமாகிய ஸ்யாமமென்னும் ஓர் பெரிய ஆலமரம் இருக்கின்றது. ஸீதை அந்த ஆலமரத்திற்குக் கைகுவித்துத் தன் விருப்பங்களெல்லாம் ஈடேறும்படி ப்ரார்த்திக்கவேண்டும். அந்த மரத்தினருகே சென்று ஸீதை அனுத்திருப்பாரா

யின், அங்கேயே கொஞ்சநேரம் இளைப்பாறியிருக்கலாம். இல்லையாயின் மேல் நடந்து செல்லலாம். அங்கிருந்து ஒரு கூப்பிடு தூரம் போவீர்களாயின். அங்கு கறுப்பாகப் புலப்படுகின்ற ஓர் அரண்யந் தெரியும். அதில் பல வ்ருக்ஷங்களும் இலந்தை மரங்களும் யமுனாதீரத்திலுண்டான மூங்கிற் புதர்களும் மிகவும் அழகாயிருக்கும். அது சித்ரகூடத்திற்குப் போகும் வழி. நான் பலதடவைகளில் அவ்வழியாகச் சித்ரகூடத்திற்குப் போயிருக்கின்றேன். அது அழகான மார்க்கம். நடந்து போவதற்கு மெதுவாயிருக்கும். அங்கு காட்டுத் தீயும் உண்டாகாது. ஆகையால் அவ்வழியில் ஓர் அபாயமும் கஷ்டமும் ஸம்பவிக்காது' என்றனன். அம்மஹர்ஷி இங்ஙனம் ராமனுக்குச் சித்ரகூடம் போகும் வழியைத் தெரிவித்துப் பிறகு தனது ஆஶ்ரமத்திற்குத் திரும்பிச் சென்றனர். ராமனும் அம்மஹர்ஷிக்கு நமஸ்காரஞ் செய்து 'அப்படியே ஆகட்டும். நீர் திற்கலாம்' என்று அவரைத் திருப்பி அனுப்பிவிட்டனன். அம்முனிவர் திரும்பிச் சென்ற பின்பு ராமன லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! முனிவர் நம்மிடத்தில் கருணை கூர்ந்திருக்கின்றனர். ஆகையால் நாம் புண்யாத்மாக்களென்று தோற்றுகின்றது' என்று மொழிந்தனன். இங்ஙனம் தீரர்களாகிய அந்தப் புருஷ சிகாமணிகள் இருவரும் ஆலோசித்துக்கொண்டு ஸீதையைத்தானே முன்னிட்டு நடந்து யமுனாநதிக்குப் போயினர். அனந்தரம் யமுனா நதியின ஸமீபத்திற்குப் போகவும்; அந்நதி வேகமாக ப்ரவஹித்துப் போகின்றதாகையால், 'இதை எப்படி தாண்டுவோம்' என்று அவர்களெல்லோர்க்கும் சிந்தை உண்டாயிற்று பினபு ராமலக்ஷ்மணர்கள் இருவரும் பற்பல காஷ்டங்களைக் கொண்டு வந்து அவைகளோடு உலர்ந்த மூங்கில்களைப் பரப்பிக் கயிற்றுக்குப்

பதிலாக வெட்டிவேர்களைக் கொண்டு கட்டி அழகாயிருக்கும்படி பெரியதொரு தெப்பஞ் செய்தனர். பிறகு வல்லவனாகிய லக்ஷ்மணன் வஞ்சிக்கிளைகளையும் நாவற்கிளைகளையும் வெட்டி அவைகளைத் தெப்பத்தின்மேல் பரப்பி ஸீதை ஸுகமாக உட்காரும்படிக்கு ஓராஸனங் கற்பித்தனன். தசரதகுமாரனாகிய ராமன், அங்கு லக்ஷ்மீ தேவிபோல இவ்வளவவ்வளவென்று அளவிடமுடியாத ஸௌந்தர்யத்துடன் ப்ரகாசிக்கின்றவளும தன் கையைப் பிடிப்பதற்குச சிறிது வெட்கித்திருப்பவளும் தன் ப்ரீதிக்கிருப்பிடமுமாகிய ஸீதாதேவியைத் தெப்பத்தின் மேல் ஏற்றினன். ராமன் அந்தத் தெப்பத்தில் ஸீதையின் பக்கத்தில் அவளது வஸ்த்ரங்களையும் பூஷணங்களையும் மண்வெட்டியையும் ஆட்டுத் தோலால் செய்த புட்டிற்கூடையையும் தமது ஆயுதங்களையும் வைத்தனன். பிறகு வீரர்களாகிய தசரத குமாரர்கள் இருவரும் முதலில் தெப்பத்தைப் பார்த்துக் கொண்டு ஸீதையை ஏற்றிவிட்டுப் பிறகு தாம் ஏறிக்கொண்டு ப்ரயத்னப்பட்டு அதை நடத்தி அந்நதியைத் தாண்டினர். ஸீதை அந்நதியின் மத்தியில் வரும்பொழுது அதை நோக்கி 'யமுனா தேவியே! நான் உன்னை இப்பொழுது தாண்டுகின்றேன். என் பர்த்தா வனவாஸ வ்ரதத்தைத் தீர்த்துக்கொண்டு சுபமாக இக்ஷ்வாகுவம்சத்தரசர்கள் பரிபாலித்து வரும் அயோத்யா புரத்திற்கு க்ஷேமத்துடன் திரும்பி வந்தவுடனே உனக்காக ஆயிரம் பசுக்களைத் தானஞ் செய்து நூறுகுடங்கள் நிரம்ப மத்யத்தையும் நிவேதனஞ் செய்து பூஜிக்கின்றேன்' என்று வேண்டிக்கொண்டு வந்தனஞ் செய்தனள். உத்தமஸ்த்ரீயாகிய அந்த ஸீதை இங்ஙனம் கைகூப்பி யமுனாநதியை பார்த்தித்துக்கொண்டே அந்நதியின் தென்கரையைச் சேர்ந்தனள். பிறகு வேகமாக ப்ரவஹித்துச் செல்வதும் அலை

கள் வரிசை வரிசையாக மேலெழப்பெற்று விளங்குவதும் கரையில் பல வ்ருக்ஷங்கள் நிறைந்திருப்பதும் ஸூர்யன் புதல்வியுமாகிய அந்த யமுனா நதியை அவர்கள் தெப்பங் கொண்டு தாண்டினர் அவர்கள் நதியைத் தாண்டி தெப்பத்தை விட்டு யமுனைக் கரையிலுள்ள வனத்தினின்றும் புறப்பட்டுப் போகையில், குளிர்ந்து பச்சென்று விளங்குகின்ற இலைகளுடன்கூடி ஶ்யாமமென்னும் பேர்பெற்ற ஆலமரத்தின் அருகிற் சென்றனர் ஸீதை அந்த ஆலமரத்தின் அருகில் வந்து 'மஹா வ்ருக்ஷமே! உனக்கு நமஸ்காரம் என் பர்த்தா வனவாஸ வ்ரதத்தை நடத்தி யீடேற்றுவாராக. நான் திரும்பி வந்து கௌஸல்யையையும், மிகுந்த புகழ்பொருந்திய ஸுமித்ரா தேவியையும், காண்பேனாக' என்று ப்ரார்த்தித்துக் கைகளைக் கூப்பிக்கொண்டு அந்த வ்ருக்ஷத்திற்கு ப்ரதக்ஷிணஞ் செய்தனள். பிறகு நிந்தைக்கிடமாகாதவளும் தனக்குட்பட்டு நடந்து கொள்பவளும் தன் மனத்திற்கு மிகவும் ஸந்தோஷத்தைக் கொடுப்பவளுமாகிய ஸீதாதேவி இங்ஙனம் தன் மனோரதத்தை வேண்டிக்கொண்டிருக்கையில்; ராமன் கண்டு, அவள் இளைப்புற்றிருக்கிறாளா இல்லையாவென்று பரிசீலித்து லக்ஷ்மணனைப் பார்த்து 'புருஷஶ்ரேஷ்டனே! ஸீதையைப் பின்னே அழைத்துக் கொண்டு நீ முன்னே நடப்பாயாக. நான் ஆயுதந் தரித்து உங்களிருவர்க்கும் பின்னே வருகின்றனன். ஸீதை, பழத்தையாவது புஷ்பத்தையாவது ஏதேதை விரும்புகின்றாளோ, ஏதேது அவள் மனத்திற்கு இனிப்பைக் கொடுக்குமோ, அவையெல்லாவற்றையுங் கொண்டு அவளுக்குக் கொடுப்பாயாக' என்றனன். ராமலக்ஷ்மணர்களிருவரும் இங்ஙனம் போய்க்கொண்டிருக்கையில், ஸீதை அவர்களுக்கு இடையில், இரண்டு ஆண் யானைகளின் மத்தியில் ஓர் பெண் யானை

போல் அழகாயிருந்தனள். ஸீதை முன்பு எப்பொழுதும் பாராத வ்ருக்ஷங்களையாவது செடிகளையாவது புதலையாவது நிறையப் புஷ்பித்திருக்கிற கொடியையாவது பார்க்கும்பொழுது 'அது என்ன? அது என்ன?" என்று ராமனை வினவிக் கொண்டிருந்தனள். ஸீதை வினவும் பொழுதே லக்ஷ்மணன் த்வரையுடன் சென்று புஷ்பங்கள் நிரம்பி அழகாயிருக்கின்ற பற்பல கிளைகளை ஒடித்துக் கொண்டு வந்து ஸீதைக்குக் கொடுத்துக்கொண்டிருந்தனன். அவர்கள் வெகு தூரம் யமுனா நதிக்கரை வழியாகவே போய்க்கொண்டிருந்தார்களாகையால் ஸீதை, அப்பொழுது மேலான மணற் குன்றுகளும் அழகிய ஜல ப்ரவாஹமும் விளங்கப்பெற்றும், ஹம்ஸங்களும் ஸாரஸப்பறவைகளும் கலகலவென்று கூவிக்கொண்டிருக்கப் பெற்றும் அழகாய்ப் புலப்படுகின்ற யமுனாநதியைக் கண்டு ஸந்தோஷித்திருந்தனள். அனந்தரம் அண்ணன் தம்பிகளாகிய அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் யமுனா நதிக்கரையிலுள்ள வனத்தின் வழியாகவே ஒரு கூப்பிடு தூரஞ் சென்று சாப்பிடத் தகுந்த சுத்தங்களாகிய ம்ருகங்கள் பலவற்றையுங் கொன்று பக்ஷித்தனர். அவர்கள் அங்ஙனங் கஷ்டப்பட்ட போதிலும் வருத்தமுற்றவர்கள் போல் சிறிதும் புலப்படாமல் முகத்தில் ஸந்தோஷம் நிரம்பப் பெற்று மயில்கள் குவியல் குவியலாகக் கூவுதலால் ஒலி உண்டாகப் பெற்றுக் குரங்குகளும் யானைகளும் எங்குந் திரிந்துகொண்டிருக்கிற மேலான அந்நதிக் கரையிலுள்ள அரண்யத்தில் ஸந்தோஷத்துடன் க்ரீடித்து அவ்வாற்றின் கரையில் மேடு பள்ளமில்லாமல் ஸமமாயிருக்கிற ப்ரதேசத்திற்குச் சென்று ஸீதைக்கு ஸம்மதமான இடத்தில் ஓர் வாஸஸ்தானம் ஏற்படுத்திக் கொண்டனர். ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

சித்ரகூடபர்வதத்திற்கருகிலிருக்கிற வால்மீகியின் ஆஸ்ரமத்திற்குப் போதலும், வால்மீகியைப் பார்த்தலும், அங்குப் பர்ணசாலை கட்டிக்கொண்டு வெகுகாலம் வாஸஞ் செய்தலும்

பிறகு ராத்ரி கடந்தவுடன் ராமன், தான் தூங்கியெழுந்திருந்த பின்பு கொஞ்சம் நித்ரை போகின்ற லக்ஷ்மணனை மெதுவாக எழுப்பி 'லக்ஷ்மணா! பகைவரைப் பறந்தோடச் செய்பவனே! அரண்யத்திலுள்ள கிளிகளும் குயில்களும் சாரிகை முதலிய மற்றைப் பறவைகளும் செவிக்கினிதாகக் கூவுகின்றன. கேட்பாயாக. ப்ரயாணத்திற்குக் காலம் ஆயிற்று. நாம் புறப்பட்டுப் போவோம்' என்றனன். நித்ரை போய்க்கொண்டிருந்த லக்ஷ்மணன், தமையனாகிய ராமன் தகுந்த காலம் பார்த்து எழுப்புகையில், அது முதலாக நித்ரையையும் சோம்பலையும் வழி நடந்து வந்த ப்ரமத்தையும் துறந்துவிட்டனன். பிறகு அவர்கள் எல்லோரும் எழுந்திருந்து பரிசுத்தமாகிய அந்நதீ ஜலத்தில் விடியற்காலத்திற் செய்யவேண்டிய ஸ்நானம் முதலிய வ்யாபாரங்களை நிறைவேற்றிக்கொண்டு சித்ரகூடத்திற்குப் பரத்வாஜ முனிவர் சொன்ன மார்க்கத்தைப் பிடித்துக்கொண்டு நடந்து சென்றனர். பிறகு ராமன் தகுந்த காலத்தில் ப்ரயாணமாய்ப் புறப்பட்டு, லக்ஷ்மணனையும் தாமரையிதழ் போன்ற கண்களையுடைய ஸீதையையும், பார்த்து 'ஸீதே! வஸந்த ருதுவில் பலாச வ்ருக்ஷங்கள் நாற்புறத்திலும் நிரம்பப் புஷ்பித்து நெருப்புப்பற்றி எரிகின்றவை போல் புலப்படுகின்றன, பார். மேலும், புஷ்பங்கள் நிறைந்திருப்பதனால் தாமே புஷ்பமாலைகளைத் தரித்திருப்பன போலும் விளங்குகின்றன. (பல்லாதக) சேரா மரங்கள் நன்றாகப் பூத்திருக்கின்றன, பார்.

இவை புதர் போல் அடர்ந்திருக்கையால், மனிதர்களால் கிட்டி நாடமுடியாதவைகளாயிருக்கின்றன. மேலும், இவை இலைகளும் காய்களும் இடைவிடாமல் நிறைந்திருப்பதால் அந்தப் பாரம் தாங்கமுடியாமல் வளைந்திருக்கின்றன. இவ்வரண்யம் இப்படி அழகாயிருப்பதனால் இங்கு நான் ஸுகமாக ஜீவித்திருப்பேன். இதற்கு ஸந்தேஹம் இல்லை. லக்ஷ்மணா! இதோ தேனீக்கள் கட்டின தேன்கூண்டுகள் பதக்களவு தேன்கள் நிரம்பி ஒவ்வொரு மரத்திலும் தொங்குகின்றன, பார். மரங்கள் தெரியாமல் பாய் படுத்தாற்போல புஷ்பங்கள் நிறைந்திருக்கிற இவ்வரண்ய ப்ரதேசத்தில், இதோ! நச்சுக்குருவி கூப்பிடுகின்றது; இதைக் கேட்டு, மயில் அதோ இதற்கு ப்ரதியாகக் கூவுகின்றது பார். இதோ சித்ரகூடம். இங்கு யானைக்கூட்டங்கள் நாற்புறமும் திரிந்துகொண்டிருக்கின்றன. பக்ஷி ஸமூஹங்களும் கலகலவென்று கூவுகின்றன. கேள். இப்பர்வதத்தின சிகரங்கள் மிகவும் உயர்ந்திருக்கின்றன. அப்பா! சித்ரகூட பர்வதத்தின வனப்ரதேசத்தில பூமி மேடுபள்ளமில்லாமல ஸமமாயிருக்கின்றதாகையால் அது அழகாயிருக்கும் மேலும், அதில் பல வ்ருக்ஷங்கள் நெக்கித்துக் கொண்டிருக்கும். அது பரிசுத்தமுமாயிருக்குமாகையால் நாம் அதில் க்ரீடித்துக் கொண்டிருப்போம்' என்றான். அனந்தரம் அந்த ராமலக்ஷ்மணர்கள் ஸீதையோடுகூட கால் நடையாகவே சென்று கண்கொண்டு பார்க்கில் மிகவும் இனியதும மனத்திற்கு மிக்க ஸந்தோஷத்தைக் கொடுப்பதுமாகிய சித்ரகூட பர்வதத்திற்குப போய்ச் சேர்ந்தனர். அந்தப் பர்வதம நானாவித பக்ஷிஸமூஹம் நிறைந்து மிகுந்த பலவர்க்கங்களும நிரம்பி அழகாகி ஸமஸ்த வஸ்துக்களும் ஸம்ருத்தமாயிருக்கப் பெற்றிருக்கும். அங்கு நல்ல ருசியுள்ள ஜலங்களும் விளங்கிக்கொண்டிருக்

கும். ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் இப்படிப்பட்ட அம்மலைக்குச் சென்று 'இனிய ஸ்வபாவமுடையவனே! இந்தப் பர்வதம் மனோஹரமாயிருக்கின்றது. இதில் பலவித வ்ருக்ஷங்களும் கொடிகளும் இருக்கின்றன. காய் கிழங்குகளும் இங்கு ஏராளமாயிருக்கின்றன. இங்ஙனம் எல்லா ஸம்ருத்தியும் பொருந்தி அழகாயிருப்பதனால் இதிலேயே ஸுகமாக ஜீவித்திருக்கலாமென்று எனக்குத் தோற்றுகின்றது. மேலும், இப்பர்வதத்தில் மஹானுபாவர்களாகிய முனிவர்களும் வாஸஞ் செய்வார்கள். ஆகையால் இது நமக்கும்[1] வஸதியாகக்கூடும். நல்லியற்கை யுடையவனே! இதில் நாம் க்ரீடித்துக் கொண்டிருப்போம்' என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு நிச்சயித்து மூவரும்[2] வால்மீகி முனிவரின் ஆஸ்ரமத்திற்குப் போய், கைகளைக் குவித்து அம்முனிவர்க்கு நமஸ்காரஞ் செய்தனர். தர்மஜ்ஞராகிய அம்மஹர்ஷியும் அவர்கள் வரக்கண்டு மிகவும் ஸந்தோஷித்து, அவர்களைப் பூஜித்து, ஸ்வாகதம் விசாரித்து, உட்காருங்களென்று மொழிந்தனர். பிறகு நீண்டழகிய பாஹுதண்டங்களையுடையவனும் மிகுந்த ஸாமர்த்யமுடையவனுமாகிய ராமன் தன் வ்ருத்தாந்தங்களை யெல்லாம் க்ரமப்படி அம்முனிவர்க்குச் சொல்லி, லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மண! அழகிய ஸ்வபாவமுடையவனே! உரத்துச் சிறந்த கட்டைகளைக் கொண்டு வருவாயாக. இங்கு ஓர் வாஸஸ்தானம் ஏற்படுத்திக்கொண்டு வஸிக்கவேண்டுமென்று என் மனது ஆசைப

---

1 இருப்பிடமாக.

2 ராமன் சித்ரகூடத்திற்குப் போகுங் காலத்தில் வால்மீகி மஹர்ஷி சித்ரகூடத்தில் வஸித்திருந்தனர். பரதன் அந்தச் சித்ரகூடத்திற்கு வந்தபின்பு ரிஷி அதை விட்டுப் போனரென்கையால் அதுமுதலாகத் தமஸாநதி தீரத்தில் வஸித்திருந்தாரென்று தெரிகின்றது.

படுகின்றது. ஆகையால் அதற்குரிய கட்டைகளைக் கொண்டு வந்து நாம் இருக்கும்படி ஓர் இடம் ஏற்படுத்துவாயாக' என்றனன். பகைவரை அடக்குந் திறமுடையோனாகிய அந்த லக்ஷ்மணனும், ராமன் சொன்னதைக் கேட்டுப் பலவித காஷ்டங்களை வெட்டிக் கொண்டு வந்து பர்ணசாலையொன்று ஏற்படுத்தினன். ராமன், காற்று மழை முதலியவைகளாலும் அசைக்கக்கூடாதபடி நிலைநின்றிருப்பதும் மேற்கூரையுள்ளதும் பார்க்க அழகாயிருப்பதுமாகிய அந்தப் பர்ணசாலையைக் கண்டு, தனக்குப் பரிசர்யை செய்துகொண்டு, 'இன்னும், என்ன ஆஜ்ஞையிடுவாரோ' என்று மனவூக்கத்துடன் இருக்கிற லக்ஷ்மணனை நோக்கி 'லக்ஷ்மணா! கறுத்த மான மாம்ஸத்தைக் கொண்டு வந்து, இந்தப் பர்ணசாலையில் அந்தந்தத் திசைகளில் அதிஷ்டானம் பெற்றிருக்கிற தேவதைகளைப் பூஜிப்போம். அங்ஙனம் பூஜிப்பதற்கு முன்னம், வெகு காலம் பிழைத்து க்ஷேமமாயிருக்க வேண்டுமென்று விரும்புகிறவர்கள் க்ருஹப்ரவேசத்திற்குச் செய்யும் வாஸ்து சாந்தியை நடத்தவேண்டும். அழகிய கண்களையுடையவனே! லக்ஷ்மணா! நீ சீக்ரமாகக் கறுத்த மானை அடித்துக்கொண்டு வருவாயாக. பூஜிப்பதற்காகப் பசுவதஞ் செய்வது தோஷமேயென்று சங்கிக்க வேண்டாம். சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கார்யத்தைச் செய்தே தீரவேண்டும். அது தர்மமென்றே நினைப்பாயாக. அவ்விதிக்கு அனுகூலமாகிய தர்மசாஸ்த்ரத்தையும் அவதானித்துப் பார்ப்பாயாக' என்றனன் வைரிகளாயிருப்பவர்களை உருக்கொலையச் செய்பவனாகிய லக்ஷ்மணன். இப்படி தமையன் சொன்ன வார்த்தையைக் கேட்டு அவ்வாறே கறுப்புமானை அடித்துக்கொண்டு வந்தனன். ராமன் மீளவும் அவனைப் பார்த்து 'இந்தக் கரு

மான் மாம்ஸத்தைப் பசனஞ் செய்வாயாக. இதனால் க்ருஹாதிஷ்டான தேவதைகளை நாம பூஜிப்போம். இந்த ஸமயம் ஸ்திரமான சுபமுஹூர்த்தமா யிருக்கின்றது. இந்தத் தினமும் மிக ஸ்திரமானது' என்று மொழிந்தனன். ப்ரதாபசாலியாகிய அந்த ஸௌமித்ராபுத்ரனும் பக்ஷயம்ருகவாக்கங்களிற் சேர்ந்த ஓர் கறுப்பு மானைக் கொன்று அதன மாம்ஸத்தை எரிகிற அக்னியில் வைத்துப் பசனஞ் செய்தனன். லக்ஷ்மணன், அம்மாமஸம் நன்ருகக் காய்ந்து ரக்தமெல்லாம் சுண்டிப்போய் பக்வமானது கண்டு புருஷஶ்ரேஷ்டனுகிய ராமனை நோக்கி 'தேவாகளை நிகர்த்தவனே! இந்தக் கறுப்பு ம்ருகத்தை ஸமஸ்த அவயவங்களோடும் பசனஞ் செய்தனன. ஸமஸ்த அவயவங்களோடுங் கூடிய பாகத்தினால் கறுத்திருப்பது பற்றி இது கறுப்பு ம்ருகம் போலவே புலப்படுகின்றது. நீ இனி வாஸ்து தேவதைகளை இம்மாமஸத்தைக் கொண்டு பூஜிக்கலாம். அதற்கு நீயே ஸாமர்த்யமுடையவன' என்றனன. குணங்கள பொருந்திய ஸ்ரீராமபிரானும் ஜபிக்கவேண்டிய மந்த்ரங்கள் எல்லாவற்றிலும் பண்டிதனுகையால், அவன ஸ்நானஞ் செய்து நியமத்துடனிருந்து வாஸ்துசாந்திக்கு வேண்டிய கர்மம நிறைவேறுமளவும் உள்ள மந்த்ரங்களை யெல்லாம் சுருக்கமாக ஜபித்துக்கொண்டே வாஸ்துகர்மங்களை நடத்தினன. அங்ஙனம ராமன வாஸ்து தேவதாஸமூஹத்தை யெல்லாம பூஜித்துப் பரிசுத்தனுகி க்ருஹத்தில் ப்ரவேசித்தனன அளவில்லாத தேஜஸ்ஸுடன பரகாசிக்கின்ற ஸ்ரீராமபிரானுக்கு அதனால் மனத்தில் மிகுந்த ஆநந்தம உண்டாயிற்று ராமன வைஶ்வதேவபலியையும் ருத்ரபலியையும் விஷ்ணுபலியையும நடத்தி வாஸ்து சாந்தியின பொருட்டு க்ருஹத்திலுள்ள பீடைகளெல்லாம் ஒழியும்

படிக்கும் மிருக்த மங்களங்களை உண்டாக்கும்படிக்கும் அதற்குரிய புண்யாஹவாசன சாந்திஜபாதிகளைச் செய்து க்ரமந் தவருமல் அந்தந்த மந்த்ரங்களையும் ஜபித்து, விதியின்படி மீளவும் நதியில் ஸ்நானஞ் செய்து ஸமஸ்த பாபங்களும் சாந்தமாகும்படி ஸமஸ்த பூதங்களையும் உத்தேசித்து மறுபடியும் உத்தமமான பலியை நடத்தினன். அனந்தரம் ராமன் பலியிடுவதற்காக ஏற்படுத்திய வேதிகைகளையும் தேவதா ஸ்தானங்களையும் அக்னிஹோத்ர க்ருஹங்களையும் ஆச்ரமத்திற்குத் தகுந்தபடி சிறியனவாக நிருமித்துக் கொண்டனன். சுபலக்ஷணங்கள் பொருந்திய ராமலக்ஷ்மணர்கள் இருவரும் வனத்திலுள்ள புஷ்பமாலைகளாலும் பக்வஞ் செய்த மாம்ஸங்களாலும் ஜலதர்ப்பணங்களாலும் வேதங்களிற் சொல்லிய மந்த்ரஜபங்களாலும்ஸமித்துக்களாலும் நாணற்புல்லுகளாலும் தர்ப்பங்களாலும் விதி தவருமல் பூதங்களுக்கு த்ருப்தி செய வித்து ஸீதையுடன்கூட அழகாயிருக்கின்ற அந்தப் பர்ணசாலையில் ப்ரவேசித்தனர். செடிகளின் இலைகளால் செய்யப்பட்ட மேற்கூரையுடையதும் அழகாயிருப்பதும் சாஸ்த்ரங்களிற் சொல்லப்பட்ட அந்தந்த இடங்களில் மடைப்பள்ளி முதலியவை நன்றாக ஏற்படுத்தப் பெற்றதும் அதிகமாகக் காற்று வீசப்பெருததுமாகிய அந்தப் பர்ணசாலையில ராமன் முதலிய மூவரும், தேவதைகள் ஸுதர்மஸபையில் ப்ரவேசிப்பதுபோல தாம் வாஸஞ் செய்வதற்காக ப்ரவேசித்தனர். அப்பொழுது ஜிதேந்த்ரியர்களாகிய அம்மூவரும் பலவகைப்பட்ட பல ம்ருகங்களும் பக்ஷிகளும் நிரம்பி, சித்ரவிசித்ரங்களாகிய பூங்கொத்துக்கள் விளங்கப் பெற்ற செடிகளுடன் கூடி, யானைகளின் ஜீங்காரங்களாலும் மற்றை ம்ருகங்களின் கண்டத்வனிகளாலும் கலகலவென்றொலித்துக்கொண்டிருக்கிற அந்

தச் சித்ரகூடபர்வதத்தின் வனப்ரதேசத்தில் ஸுகமாக விளையாடிக் கொண்டிருந்தனர். ராமன் மிகவும் அழகாயிருக்கிற அச்சித்ரகூட பர்வதத்தையும், ம்ருகங்களும் பக்ஷிகளும் ஸஞ்சரிக்கப்பெற்று அழகான துறை யமைந்து மால்யவதி யெனனும் பேருடைய அப்பர்வதத்திலுள்ள நதியையும் சோந்தவுடனே ஸந்தோஷத்தினால் சரீரம் முழுவதும் பளபளவென்று விளங்கப் பெற்றுப் பட்டணத்தை விட்டு வந்ததனாலுண்டான மனவருத்தஞ் சிறிதுந்தோனறுமலிருந்தனன். ஐம்பத்தாறுவது ஸர்க்கம்முற்றிற்று.

---

(ஸுமந்தரன் ராமனை விட்டு அயோத்யைக்குப் போதலும், பட்டணத்து ஜனங்கள மனவருத்தமுறுதலும், தசாதன சோகப்படுதலும.)

இங்ஙனம் ராமன் புறப்பட்டுக் கங்கையின் தெனகரைக்கு வந்தவுடனே குஹன் மிக்க மனவருத்தமுற்று அந்த ரகுகுலசிகாமணி கண்பார்வையைக் கடந்து செல்லும் வரையிலும், அங்கேயே இருந்து ஸுமந்த்ரனுடன் கூட ராமனது குணங்களைப் பேசிக்கொண்டிருந்து அவனை அழைத்துககொண்டு தன் வீட்டிற்குப போயினன. அந்த ஶ்ருங்கிபேரபுரத்திலுள்ள சாரர்கள், ராமாதிகள் பரத்வாஜமுனிவரிடம் போவது, ப்ரயாகக்ஷேத்ரத்தில அம்முனிவருடன கூடியிருப்பது முதலாகச் சித்ரகூடபர்வதத்திற்குப் போகும் வரையிலும நடநத வருத்தாநதங்களெல்லாவற்றையும் ஸுமந்த்ரனுக்குத் தெரிவித்தனர். பிறகு ஸுமந்த்ரன குஹனிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்டு மேலான குதிரைகளைத் தேரில் பூட்டிக்கொண்டு மிக்கமனவருத்தத்துடன அயோத்யாபுரத்திற்குப்போயினன். அவன், மார்க்கத்தில் புஷ்பங்கள் நிறைந்து குமுகுமு

வென்று மணங் கமழ்ந்துகொண்டிருக்கிற வனப்ரதேசங்களையும், நதிகளையும், ஸரஸ்ஸுக்களையும், க்ராமங்களையும், பட்டணங்களையும் பார்த்துக்கொண்டே தாண்டிச் சென்றனன்.[1] அனந்தரம் ஸுமந்த்ரன் ஸ்ருங்கிபேரபுரத்தினின்றும் புறப்பட்ட மூன்றாவது நாள் ஸாயங்காலத்தில் அயோத்யைக்குப் போய்ச் சேர்ந்து, அந்நகரம் ஆநந்தங் குன்றி அழுகுரலெழப் பெற்றிருக்கக் கண்டனன். ஐயோ! ஸுமந்த்ரன் ராமனை விட்டுப் பிரிந்ததற்கு முதலே மனத்தில் பரிதபித்துக் கொண்டிருந்தனன். மேலும், பாழடைந்தாற்போலாகி நிஸ்ஸப்தமாயிருக்கின்ற அந்நகரத்தைக் கண்டவுடனே மனவருத்தங்கரைபுரண்டு மேலெழப் பெற்றுத் தனக்குள் தான் 'இப் பட்டணமும் இதிலுள்ள யானைகளும் குதிரைகளும் ஜனங்களும் ஜனாதிபதியும் கூட ராமனுக்கு நேர்ந்த மனஸ்தாபத்தினால் மனவருத்தம் உண்டாகப் பெற்று அதனால் நன்கு பீடிக்கப்பட்டு அந்தச் சோகாக்னியில் ஆழ்ந்து அவ்வக்னியால் தஹிக்கப்படாதிருப்பார்களா' என்று சிந்தித்தனன். ஸுமந்த்ரன் இங்ஙனஞ் சிந்தித்துக்கொண்டே 'பட்டணம் நிஸ்ஸப்தமாயிருக்கின்றது. மன்னவனது கதி யாதாயிருக்கின்றதோ' என்று வேகமாகக் குதிரைகளை ஓட்டிக்கொண்டு பட்டணத்துத்வாரத்திற் சேர்ந்து அதில் த்வரையுடன் ப்ரவேசித்தனன். ஸுமந்த்ரன் வந்துகொண்டிருக்கையில், பட்டணத்து ஜனங்கள் கண்டு நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் கும்பல்கூடி 'எங்கே ராமன்'

---

1 முதல்நாள் கங்கையைத் தாண்டி ஒரு வ்ருக்ஷத்தின் கீழ் வாஸஞ் செய்தல், இரண்டாவது நாள் பரத்வாஜாஸ்ரமத்தில் வஸித்தல், மூன்றாவது நாள் யமுனைக் கரையில் இருத்தல், நான்காவது நாள் சித்ரகூடத்திற்குப் போதல், ஐந்தாவது நாள் ஸாரதிகள் திரும்பி வந்து வ்ருத்தாந்தத்தைத் தெரிவித்தல்—என்று தெரிகின்றது.

என்று வினவிக்கொண்டு அவனை எதிர்கொண்டு ஓடிவந்தனர். ஸுமந்த்ரனும் அவர்களுக்கு 'நான கங்காநதிக் கரையில் மஹானுபாவனுகிய ராமனை விட்டு விடைபெற்றுக்கொண்டு அந்தத்தார்மிகனது கட்டளைப்படிக்குத் திரும்பி வந்தேன்' என்றனன். ஜனங்கள், ராமாதிகள் கங்கையைத் தாண்டிச் சென்றூர்களென்று தெரிந்து முகத்தில் கண்ணீர் ததும்பப் பெற்று, 'ஐயோ! ராமனை இழந்தோமே! ஏ! என்ன பிழைப்பு' என்று பெருமூச்செறிந்து 'ஹா! ராமா!' என்று கூப்பிட்டுக் கதறினர். அந்த ஜனங்கள் கும்பல்கும்பலாக நின்றுகொண்டு 'இந்த ரதத்தில ராமனைப் பார்க்க நேரப் பெருதிருக்கின்ரேமே. அவனைப் பார்க்கப் பெருமல் பாழாய்விட்டோமே [1] நாம் தானஞ் செய்யும்பொழுதும் யாகம் நடத்தும்பொழுதும் விவாஹம் முதலிய மங்கலகார்யங்களிலும் பெரிய ஸபைகள் சேரும்பொழுதும் அந்தந்தக் கார்யங்களை நன்கு நடத்தும்பொருட்டு நமக்கு நடுவில் வந்திருந்து நிறைவேற்றுந தார்மிகனுகிய ராமனை இனி நாம் ஒருக்காலும் அங்ஙனமே நங்கூட்டத்து நடுவில் வந்திருக்கப் பார்க்கப் போகிறதில்லை. ராமன் 'ஜனங்களுக்கு எது ஹிதம்? எது ப்ரியம்? எதனுல் ஸுகம் உண்டாகும்?' என்று நன்கு ஆலோசித்துப் பார்த்து, தந்தை தன பிள்ளைக

1 ஒருவன் தானஞ் செய்யும்பொழுது தேசகாலங்களைத் தெரிவித்து ஸத்பாத்ரமா யிருப்பவனுக்குக் கொடுப்பிக்கிறதற்காகவும், யஜ்ஞங்களை செய்யும்பொழுது ந்யாயத்தின்படி ஸம்பாதித்த த்ரவ்யங்களைக் கொண்டு அந்த யஜ்ஞங்களைச் செய்வித்துக் காமங்களில் வரும் ஸந்தேஹங்களைத் தீர்த்து மற்றவைகளை ஜ்ஞாபனஞ் செய்கைக்காகவும் விவாஹத்தில் உபயவாக்கத்திலுள்ளவர்களுக்கும் பொதுவாக நின்று ஸம்மதிக்காதவர்களுக்கு வேண்டிய த்ரவ்யங்களைக் கொடுத்துக் கர்மங்களைத் தவருமல் நடப்பிக்கிறதற்காகவும், ராமன் அருகில் வந்திருப்பானென்று கருத்து.

னைப் பாதுகாப்பதுபோல் இப்பட்டணம் முழுமையும் பாதுகாத்து வந்தானே' என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டிருக்கையில், ஸுமந்த்ரன் செவியுற்றனன். ஸுமந்த்ரன் கடைத்தெருவில் போகும்பொழுது இருபுறத்திலும் ஸ்த்ரீகள் ராமதுக்கத்தினால் பரிதபித்து சாளரங்களினின்றுந் தன்னைப் பார்த்துச் செய்யுங் கதறல்களைக் கேட்டுக்கொண்டே சென்றனன். அந்த ஸுமந்த்ரன் பரமதுக்கத்தினால் பீடிக்கப்பட்டு மனமயங்கின ஜனங்களைப் பார்க்கப் பொறாமல் முட்டாக்கிட்டு முகத்தை மூடிக்கொண்டு ராஜமார்க்கத்தின் மத்தியில் சென்று, தசரதமஹாராஜன் வாஸஞ் செய்யும் க்ருஹத்திற்குப் போய்ச் சேர்ந்தனன். அவன் சீக்ரமாக ரதத்தினின்றும் கீழே இழிந்து ராஜக்ருஹத்தில் ப்ரவேசித்து, அரசன் வெளிகிளம்பி வாராதிருப்பதுபற்றி வெகு ஜனங்கள் நிறைந்திருக்கிற ஏழு கட்டுகளைத் தாண்டிச் சென்றனன். அப்பொழுது அங்குள்ள ஸ்த்ரீகள் மேடைகள் மேலிருந்தும் ஏழு நிலையுள்ள விமானங்களினின்றும் உப்பரிகைகளினின்றும் ஸுமந்த்ரன் வந்ததைக் கண்டு ராமனைக்காணாமையால் துக்கத்தில் ஆழ்ந்து பரிதபித்து ஹாஹாகாரஞ் செய்தனர். அந்த ஸ்த்ரீகள் மேன்மேலும் துக்கத்தினால் வருந்தி மைகலைந்து நிர்மலங்களாகிய கண்களில் நீர் ததும்பப் பெற்றுக் கலக்க முற்றிருக்கையால் ஒருவரை யொருவர் ஸ்பஷ்டமாகப் பார்க்க நேராமலே பார்த்துக்கொண்டிருந்தனர். அனந்தரம் ஆங்காங்கு உப்பரிகைகளிலிருந்து தசரதனுடைய பெண்டுகள் ராமன் காட்டுக்குப் போன மனோவருத்தத்தினால் பரிதபித்து மெதுவாகத் தமக்குள் 'ஸுமந்த்ரன் இங்கிருந்து ராமனோடு கூடப் போயினன். இவ்விடத்திற்கு ராமனில்லாமல் வந்தானே! துக்கித்துக் கொண்டிருக்கிற கௌஸல்யைக்

குத் தான் என்னவென்று சொல்லப்போகின்றனனா? [1] ராமனில்லாமல எனக்குப் பிழைத்திருப்பதே கஷ்டமாயிருக்கின்றது. அப்படியே பிள்ளை புறப்பட்டுப் போகையில கௌஸல்யை பலாத்காரமாக ப்ராணன்களைப் பிடித்து வைத்துக் கொண்டிருப்பாளென்பதும் நிஜமாக ஸாத்யமன்றென்றே எனக்குத் தோற்றுகின்றது' என்று சொல்லிக் கொண்டனர். அந்த ஸுமந்த்ரன் இங்ஙனம் அப் பெண்டுகள் சொல்லிக் கொள்ளும் ஸத்யமான பேச்சுகளைச் செவியுற்றுக் கொண்டே, அவரது சோகாக்னியால் எரிவது போல் புலப்புகின்ற ராஜக்ருஹத்திற்குள் வேகமாக ப்ரவேசித்தனன. அவன எட்டாவது கட்டில் நுழைந்து அங்கு வெளுத்துப புலபபுகின்ற மந்திரத்தில் புத்ர சோகத்தினால வருந்தி மனமயங்கி முகம் வாடி உட்கார்ந்திருக்கிற மன்னவனைக் கண்டனன். ஸுமந்த்ரன அங்கு உட்கார்ந்திருக்கிற அம் மன்னவனிடஞ் சென்று நமஸ்காரஞ் செய்து. ராமன் சொன்னவற்றில் சிறிதாயினும் தப்பாமல் ஸரியாகச் சொல்லிவிட்டனன். அரசனும் மனங் கலங்கப் பெற்றிருப்பதனால் அவ்வுரைகளைக் கேட்டுப் பதிலொன்றுஞ் சொலல முடியாமல் ராமன் காட்டுக்குச் சென்ற மன வருத்தத்தினால் பரிதபித்து மூர்ச்சித்துப் பூமியில் வீழ்ந்தனன். இப்படி மன்னவன மூர்ச்சித்தவுடனே அந்தப்புர மடந்தையர்கள எல்லோரும் சோகத்தில ஆழ்ந்து வருந்தி, அவன தரையில விழும் பொழுதே கைகளை உயரத்

[1] இதற்கு மூலம்—'யயாச மந்யே உஹாஜீவமேவந ந ஸுகாந யிருவம। ஆசஹிஜிய புத்ரே ஙாயாதே கௌஸல்யா யதாஜீவதி'' கௌஸலயை பலவந்தமாகப் பிழைத்திருக்கிறளென்பது மிகவும கஷ்டமாயிருப்பது. இப்படி துக்கப்பிழைப்பாகப் பிழைத்திருப்பது மற்றொருவர்க்கு தரமன்றென்று நிஜமாக எனக்குத் தோற்றுகின்றது' என்று மஹேஸ்வரதீர்த்தர்.

தூக்கிக்கொண்டு 'ஹா' என்று கதறிவிட்டனர். அப்பொழுது கௌஸல்யை, ஸுமித்ரையுந் தானுமாகத் தரையில் விழுந்த பர்த்தாவை எழுப்பி எடுத்து 'மஹாபாக்யமுடையவனே! எவர்க்குஞ் செய்யத் தரமல்லாத கார்யத்தைச் செய்யுந் திறமையுள்ளவனாகிய உமது புதல்வன் ராமனை அனுப்புகையில், அவன் வாஸஞ் செய்கிற வனத்திலிருந்து வந்திருக்கிற தூதனாகிய இந்த ஸுமந்த்ரனைப் பார்த்து ஏன் பேசாதிருக்கின்றீர்? ரகுகுலதிலகனே! ராமனைக் காட்டிற்கு அனுப்பி நீதியினின்று தவறினீர். இப்பொழுது அதற்கு லஜ்ஜைப் படுகின்றீர். அது யுக்தமன்று. எழுந்திரும், உமக்குச் 'சொல்லித் தவறாதிருக்கும் வ்ரதத்தைப்பற்றி புண்யம் உண்டாகுமாக, சோகிப்பதனால் ப்ரயோஜனம் இல்லை. தேவா! எவளிடத்தில் பயப்பட்டு ஸூதனைப் பார்த்து ராமவ்ருத்தாந்தம் வினவாதிருக்கின்றீரோ. அந்தக் கைகேயி இவ்விடம் இல்லை. ஆகையால் பயமின்றி மனக்கவலையற்றுப் பேசலாகும்' என்றனள். இங்ஙனம் அந்தக் கௌஸல்யை சோகத்தினால் வருந்திக் கண்ணீர் ததும்பப் பெற்றுத் தழதழத்த கண்டத்துடன் மஹாராஜனைப் பார்த்து மொழிந்துவிட்டு உடனே சோகாதிசயத்தினால் தானும் கீழே விழுந்தனள். இவ்விதம் புலம்பித் தரையில் விழுந்த கௌஸல்யையையும் மூர்ச்சித்துக் கீழே விழுந்திருக்கிற பர்த்தாவையும் பார்த்து ராஜபத்னிகளெல்லோரும் பெருங்குரலிட்டழுதனர். அனந்தரம் அவ்வந்தப்புரத்தில் இங்ஙனம் அழுகுரல் உண்டாவதைக் கேட்டுப் பட்டணத்திலுள்ள வயது சென்றவர்களும் பருவம் நிரம்பியவர்களுமாகிய புருஷர்களும் ஸ்த்ரீகளும் ஆகிய அனைவரும் நாற்புறத்திலும் ரோதனஞ் செய்தனர். அங்ஙனம் அந்தப் பட்டணம் முழுவதும் ராமன் வனத்திற்குப் போன ஸமயத்திற்போல மீளவும் பெ

ருங் கலக்கம் பெற்றிருந்தது. ஐம்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுமந்த்ரன் தசரதனிடத்தில ராமன் சொல்லியனுப்பிய ஸமாசாரங்களைக் கூறுதலும் ஸீதையின் துக்கத்தைத் தெரிவித்தலும.

பிறகு சிரேஷ்டோபசாரங்கள் செய்யப் பெற்று ஸுமந்த்ரனிருக்குந திசைக்கு முகந் திருப்பிக் கொண்டு ராமனது வ்ருத்தாந்தங்களை விசாரிக்கும் பொருட்டு அவனை அருகில் அழைத்தனன. அனந்தரம் ராமனையே நினைத்துக் கொண்டு மிக்க மனவருத்தம் உண்டாகப் பெற்றுப் புதிதாய பிடிபட்ட யானைபோல் பரிதபித்துப பெருமூச்செறிநது த்யானஞ் செய்வதுபோல் ஏதுந் தோற்றப் பெறுமல் வாயை மூடிக கொண்டிருநதது வயாதிக்ரஸ்தமாகிய குஞ்ஜரம்போல சிந்தையுற்றிருக்கின்ற வ்ருத்தனுகிய அம்மஹாராஜனிடம் வநது ஸுமந்த்ரன் கைகளைக் கூப்பிக் கொண்டு நின்றிருநதனன். அரசனும், தன்னருகில் புழுதி படிந்த அவயவங்களோடு முகத்தில மிகுந்த கண்ணீர் பெருக ஒளி மழுங்கி நிற்கிற ஸுமந்த்ரனைப் பார்த்து மிகவும் பரிதாபம் அடைநது 'ஸூதனே! மேலானஸுகங்களை அனுபவித்த தர்மஸ்வபாவனுகிய அந்த ராமன் எந்த வருக்ஷத்தின கீழ் வஸிநதிருக்கின்றனன்? எதைச் சாப்பிடுகின்றனன். ஸுமந்த்ரா! அவன் துக்கத்தை அனுபவிப்பதற்கு உரியவனன்றே! மேலான படுக்கையில் படுத்துககொள்ளவேண்டியவனுயிற்றே! அப்படிப்பட்ட ராஜகுமாரன் கஷ்டப்பட்டு வெறுநதரையில் அநாதன்போல் எப்படி படுத்துக்கொள்கின்றனன். எவன் போகும்பொழுது காலாட்க

ளும் தேர்களும் யானைகளும பின்றொடர்ந்து செல்லு மோ, அப்படிப்பட்ட ராமன இப்பொழுது ஜனஸஞ்சார மில்லாத அரண்யத்தில் எபபடி இருக்கின்றனன கரூரங் களாகிய ஸிம்ஹாதி ம்ருகங்களும மலைப்பாம்புகளும் க்ரு ஷ்ணஸர்ப்பங்களும் நிறையத் திரிந்துகொண்டிருக்கிற வனத்திற்கு என் குமாரர்களாகிய ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் எப்படி போயிருக்கின்றனர். ஸுமந்த்ரனே! ஸீதை மிகவும் ஸுகுமாரமாயிருப்பவள். அவள் கஷ்டத்தைக் கண்டால் எவர்க்குத்தான் மனவருத்தம உண்டாகாது. அப்படிப்பட்ட ஸீதையை அழைத்துககொண்டு அந்த ராஜகுமாரர்கள் இருவரும் ரதத்தினின்றும் கீழே இழி ந்து எபபடி கால்நடையாய்ப் போயினர்? ஸூதனே! அஸ்வினீதேவதைகள் மந்தரபர்வதத்தில் ப்ரவேசிபபதுபோல வனாந்தரத்தில் ப்ரவேசிக்கின்ற என் புதல்வர்களைக கண் ணாரக் காண நேரப பெற்றாயாகையால நீ ப்ரயோஜனங்க ளெலலாம் நிறைவேறப் பெற்றனை. அரண்யத்திற்குப் போ னபினபு ராமன் யாது மொழிந்தனன்? லக்ஷ்மணன் யா து கூறினன்? ஸீதையும் என்ன சொல்லினள்? ராமன எங் கெங்கு உட்கார்ந்திருந்தானோ, எங்கெங்குப் படுத்திருந் தானோ, அவை யெல்லாவற்றையும எனக்கு விஸ்தாரமாக வர்ணித்துச் சொல்லவேண்டும். யயாதி ஸ்வர்க்கத்தினி ன்றும் கீழே விழும்பொழுது, தனக்கு ஸஜ்ஜனஸஹவா ஸம் நேரிடும்படி இந்த்ரனை வேண்டிக்கொண்டு அதனால் ஸ்வர்க்கத்தினின்றும் நழுவிக் கீழே விழுந்த துககம் சிறி தும் நெஞ்சில தோற்றப் பெறுதிருந்தனன. அபபடியே நானும் ராமனை விட்டுப் பிரிந்த மஹாதுககத்தில் ஆழ்ந் திருப்பினும், அவனது சரித்ரத்தைக் கேட்பதனாலாவது அந்த வருத்தந் தீரப் பெற்றுப் பிழைத்திருப்பேன்' என றனன். மன்னவன் இங்ஙனம் வினவுகையில், ஸுமந்த்ரன்

கண்டத்தில் கண்ணீர் வந்தடைக்கப் பெற்று அதனால் தழுதழுத்த வார்த்தையுடன் அம்மஹாராஜனைப் பார்த்து 'மன்னவர் தலைவனே! ராமன் தர்மத்தையே பரிபாலிக்க முயன்று உன்னை நினைத்துக் கைகளைக் குவித்துத் தலை வணங்கி நமஸ்காரஞ் செய்து என்னைப் பார்த்து 'ஸாரதீ! என் தந்தை ஆத்மஸ்வரூப முணர்ந்தவன்; ஆகையால் தலை வணங்கி நமஸ்காரஞ் செய்யத் தகுந்தவன்; ஆகை யால் நான் அவரை நமஸ்கரித்தேனென்று மொழிந்து என்கருப பதிலாக அம்மஹாநுபாவரது பாதங்களிரண் டிலும் தலை வணக்கி நமஸ்காரஞ் செய்யவேண்டும். ஸூ தனே! அந்தப்புரத்தில் 'இவர் அவர்' என்று பாராமல் எல்லோர்க்கும் நான் சொன்னேனென்று சொல்லி எனது ஆரோக்யத்தை அறிவித்து அவரவர் பருவத்துக்குத் த குந்தபடி எனது நமஸ்காரத்தையுந் தெரிவிக்கவேண்டும். என் தாயாகிய கௌஸல்யைக்கும் நீ பாராமல் என் க்ஷேமத்தையும் எனது நமஸ்காரத்தையும் சொல்லவேண் டும் அவளுக்கு, தர்மத்திலாவது பர்த்தாவினிடத்திலா வது ஏமாறாமல் மன ஊக்கமுற்றிருக்கும்படி நான் சொன் னதாகச் சொல்லவேண்டும். மேலும், இவ்வார்த்தையை யுங் கூட அவளிடம் கூறுவாயாக 'தேவீ! நீ எப்பொழு தும் தர்மத்தைக் கைவிடாமல் அந்தந்தக் காலங்களில் தவறாமல் அக்னிஹோத்ர க்ருஹங்களுக்கு உபசாரஞ் செ ய்துகொண்டிருப்பாயாக. அரசரது பாதங்களில் தெய்வ த்திற்குப்போல பரிசர்யை நடத்திக்கொண்டிருப்பாயாக. உனக்குச் சக்களத்திகளாகிய கைகேயி முதலிய என் தா ய்மார்களெல்லோரிடத்திலும் நீ மேற்பட்டவளென்கிற கர் வமாவது, 'நான் ஜ்யேஷ்டபத்னியாகையால் ஒருவர்க்குக் கீழ்ப்படிந்திருக்கலாகாது' என்கிற மனப் பெருமையாவது உண்டாகப் பெறாமல் அவை யிரண்டையும் தூரத்தில்

துறந்திருப்பாயாக. அம்மா! அரசனையும், அரசனைப் போல கௌரவிக்கத் தகுந்தவளாகிய கைகேயியையும் அநுஸரித்திருப்பாயாக. அரசனுக்குப் பின்பு கைகேயியே மேன்மைப் படுத்துகைக்குரியவளென்பது உண்டாயிருப்பினும் ராஜாவினிடத்திற்போல அவளிடத்தில் நடந்துகொள்ள வேண்டும். அரசர்கள் தனத்தினால் பெரியோர்களேயன்றி வயஸைப் பற்றி அன்று. தனத்தினால் பெரியோராயிருப்பவர்களே ராஜாக்களாவார்கள். ஆகையால் பரதன் சிறியவனாயினும் அவன் ராஜாவாகையால் அவனை நீ பெரியவனென்றே பாவிக்க வேண்டும். ராஜ தர்மத்தை மனத்தில் படுத்திக்கொள்வாயாக. இது உனக்கே தெரிந்திருக்கும்' என்றனன். பரதனிடஞ் சொல்லும்படிக்கும் என்னைப் பார்த்து 'ஸூத! நீ நான் சொன்னேனென்று பரதனுக்கு என் க்ஷேமத்தைச் சொல்லவேண்டும். மேலும், தாய்மார்கள் அனைவரிடத்திலும் பேதமின்றி நியாயத்தின்படி நடக்க வேண்டுமென்று நான் சொன்னதாக அவனுக்குச் சொல்ல வேண்டும். இக்ஷ்வாகு வம்சத்தை மனக் களிப்புறச் செய்யும் மஹாபுஜனாகிய அந்தப் பரதனோடு இன்னும், 'நீ யுவராஜனாயிருந்து, ராஜ்யத்தில் ப்ரதானமாகத் தகப்பனாரையே வைத்து அவரது ஆஜ்ஞையின்படி பரிபாலித்து வரவேண்டுமேயன்றி அவரை உல்லங்கனஞ் செய்யலாகாது. ஏனெனில், அவர் மிகவும் வயது சென்றவர்; ஆகையால் அவர் சொன்ன வார்த்தைக்குத் தடை செய்யலாகாது. யௌவராஜ்யத்தைக் கைப்பற்றி அவரது ஆஜ்ஞையை நடத்தி இஷ்டங்களான போகங்களை அநுபவித்து ஜீவித்திருப்பாயாக' என்றும் சொல்லுவாயாக என்றனன். ராமன் மீளவும் என்னைப் பார்த்துக் கண்ணீர் மிகவும் ததும்பப் பெற்றுப் பரதனை உத்தேசி

த்து 'பரதா! என் தாய் பிள்ளைகளிடத்தில் மிகுந்த ப்ரேமமுடையவள். அதற்குத் தகுந்தபடி நான் அவளருகில் இல்லாமற் போயினும் நீ எனக்குப் பதிலாக இருந்து உன் தாயைப் போலவே என் தாயாரையும் பார்த்துக் கொள்ள வேண்டும்' என்று இங்ஙனம் என்னுடன் சொல்லிக்கொண்டே மனவருத்தத்தினால் கண்களிரண்டும் செந்தாமரை மலர்போல் விளங்கப் பெற்று மிகவும் கண்ணீர் பெருக்கினன். லக்ஷ்மணன் மாத்ரம் மிகுந்த கோபாவேசத்துடன் பெருமூச்சுவிட்டுக்கொண்டு இந்த ராஜகுமாரனாகிய ராமன் எந்த அபராதஞ்செய்தானென்று நகரத்தினின்றும் துறத்தப்பட்டனன், ராமனை அரண்யத்திற்கு அனுப்பியதைப்பற்றி நாங்களெல்லோரும் மிகுந்த மனவருத்தம் அடைகின்றனம். இங்ஙனம் ராமனைப் போன்றவர்களுக்கு இந்த மனவருத்தம் கொடுப்பதனால் அம்மன்னவன் செய்தது மிகவும் அகார்யமே என்பதில் ஸந்தேஹமேயில்லை. அவ்வரசன் துச்சமாகிய கைகேயியின் ஆஜ்ஞைக்கு உட்பட்டு இப்படிப்பட்ட துஷ்டகார்யத்தைக் கார்யமென்றே நினைத்துச் செய்தனன். அரசன் தான் செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றினனாயினும், அது எப்படி அகார்யமாகும்?' என்பாயோ, கைகேயி ராஜ்ய லோபத்தினால் ராஜாவினிடத்தில் ராமனைக் காட்டுக்கு அனுப்பும்படிக்குச் சொல்லிச் செய்வித்ததேயன்றி வேறில்லை. ஆகையால் இது தோஷமென்பது பற்றிச் சொல்லவேண்டிய அவச்யமேயில்லை. அன்றியே கைகேயிக்கு வரங் கொடுத்திருந்தானாகையால் அதுபற்றி இங்ஙனஞ் செய்ய நேரிட்டதென்றாலும், எவ்விதத்திலும் துஷ்கார்யஞ் செய்ததேயாகுமன்றி அழகாகவே செய்தானென்று சொல்ல முடியாது. அவ்வரங்களுக்கு ராமனை அரண்யம் போகத் துறத்துவதும் பரதனுக்கு ராஜ்யத்

தில் பட்டாபிஷேகஞ் செய்வதுமே பலங்களாக வேண்டு மென்று நிர்பந்தமில்லை யன்றே? ஆகையால் இது எப்படி பார்த்த போதிலும் துஷ்காரியமே யென்பதற்கு ஸந்தே ஹமே யில்லை. இப்படி எங்களைப் பீடிப்பது, தெய்வமே தன் மனம் போனபடி மன்னவனைத் தூண்டிவிட அதற்குவசப் பட்டு மன்னவன் செய்தானன்றி ஸ்வபுத்தியைக் கொண்டு செய்யவில்லை யென்னினும், தெய்வம் பரேரிதத பொழு திலும் ஏதாவதொரு தோஷத்தை முன்னிட்டுக் கொண் டே பரித்யாகஞ் செய்யவேண்டும். ராமனைப் பரித்யாகஞ் செய்வதற்கு அப்படிப்பட்ட காரணம் ஒன்றும் புலப்பட வில்லை. ராமனை அரண்யத்திற்கு அனுப்புவதே நிரம்ப வும் ந்யாய விருத்தமாயிருக்கின்றது. ஆயினும் புத்திக் குறைவினால் ஆலோசியாமல் மன்னவன் செய்து விட்ட னன் ஆகையால் அது இப்பொழுது அவனுக்கே அனு தாபத்தை விளைக்கப் போகின்றது. தந்தையை நிந்திக்க லாகா தென்பாயோ? எனக்கு மஹாராஜனிடத்தில் தந் தையென்னும் புத்தி உண்டாகவில்லை. எனக்கு உடன்பி றந்தவனும் ஸ்வாமியும் பந்துவும் தந்தையும் ராகவனே. ஸமஸ்த லோகப்ரியனும் ஸர்வலோக ஹிதனுமாகிய ரா மனைக் கைவிட்டனை. இப்படிப்பட்ட க்ரூரகர்மத்தைச் செய்ததனால் உலகங்களுக்கெல்லாம் அப்ரியனும் ஸர்வ லோகஹிததத்தில் ஆஸக்தியற்றிருப்பவனுமாகிய உன்னி டத்தில் பரதனைப் போன்றவனுக்குத் தவிர மற்றை எவ ர்க்காயினும் ப்ரீதி எப்படி உண்டாகும். ஸகல ப்ரஜைக ளின் மனத்திற்கும் இனிமையைக் கொடுக்குந் தன்மைய னும் தர்ம ஸ்வபாவனுமாகிய ராமனை அரண்யத்திற்கு அனுப்பி உலகத்திலுள்ளவர் அனைவரோடும் விரோதித் துக்கொண்டு நீ எப்படி அரசனாயிருக்கலாகும்? என்று அரசனிடம் சொல்லுவாயாக' என்றனன். மஹாராஜ

னே! ஸீதையோ வென்றால், லக்ஷ்மணனைப்போல் ஒன்றுங் கூறமாட்டாளே யன்றி மனத்திலுள்ள சோகாதிசயத்தினால் பெருமூச்செறிந்துகொண்டு கம்பீரமான மனமுடையவளாகையால் உள்ளே பூதம் ஆவேசிக்கப் பெற்றவளபோல அப்படியும் இப்படியும் அசையாமல் திகைத்து நின்று கண்விழிகள் இரண்டும் ஆணியிட்டாற்போல ஒரே நிலையாக விளங்கப் பெற்று எல்லாவற்றையும் மறந்து புன்சிரிப்புடன் பரகாசிக்கும் நிலையும் தொலையப் பெற்று வெறுமனே இருந்தனள். அவள் ராஜகுமாரத்தியாகையால் அதுவரையில் எந்நாளும் வ்யஸனத்தை அனுபவித்தறிந்தவளன்று. அப்படிப்பட்ட ஸமயத்திலும் கைகேயியைப் பற்றி ஒரு சொல் சொல்லியும் நிந்தியாதிருந்த அப் பெண்பிள்ளையை எவ்வண்ணம் புகழலாகும்? அந்த ஸீதை பர்த்தாவின் துயரத்தைப் பார்த்து அதனால் தனக்கு மனவருத்தம் உண்டாகப் பெற்று அழுதுகொண்டிருந்தனள். அதுவேயன்றி என்னிடம் ஒன்றுஞ் சொல்லவில்லை. அவள் தன் பர்த்தாவை வெறுமனே பார்த்துக்கொண்டிருந்து மனவருத்தத்தினால் முகம் வாடி வதங்கப் பெற்று, நான் ப்ரயாணமாய்ப் புறப்பட்டுப்போவது கண்டவுடனே 'ரதம் போயிற்று; இனி ராகவன் எப்படி நடக்கப் போகின்றான்' என்று துக்கத்தைப் பொறுக்க முடியாமல் கண்ணீர் பெருக்கினள். லக்ஷ்மணன் சுச்ரூஷைகளை செய்து காத்துக்கொண்டிருக்கப் பெற்ற ஸ்ரீராமன் அஞ்ஜனம் மொழிந்து முகத்தில் கண்ணீர் ததும்பக் கைகளைக் குவித்துக் கொண்டிருந்தனன். அப்படியே ஸீதையும் பார்ப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் மிகுந்த மனஇரக்க முண்டாகும்படி அழுதுகொண்டு ரதத்தையும் ரதத்தைப் போலவே என்னையும் பார்த்துக்கொண்டிருந்தனள். ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுமந்த்ரன் தசரதனுக்கு, ராமனைப் பிரிந்து அயோத்யையிலுள்ள சராசரங்களனைத்தும் மனவருத்தமுற்றிருப்பதைக் கூறுதலும், தசரதன் அதைக் கேட்டுப் பசாதாபத்தினுல் மூர்ச்சித்தலும்.

இப்படி மந்த்ரி ச்ரேஷ்டனும் ஸாரதியுமாகிய ஸுமந்த்ரனை சொல்லிக்கொண்டிருக்கையில் அரசன் 'கேட்டு மற்றை வருத்தாந்தங்களையும் சொல்லுவாயாக' என்றனன். ஸுமந்த்ரனும் அரசனது வார்த்தையைக் கேட்டுக் கண்ணீர் வந்து கண்டத்தில் நின்றடைக்கையில் மிகவும் ஆயாஸம் அடைந்து மீளவும் ராமவருத்தாந்தத்தை விஸ்தரமாக இங்ஙனஞ் சொல்லத் தொடங்கி 'மஹாராஜனே! வீரர்களாகிய அவ்விருவரும் ஜடைகளைத் தரித்து மரவுரிகளை உடுத்து கங்காநதியைக் கடந்து ப்ரயாக க்ஷேத்ரத்தைக் குறித்துப் போயினர். லக்ஷ்மணன் ராமனைக் காத்துக்கொண்டு எல்லோர்க்கும் முன்னே சென்றனன். அங்ஙனம் அவர்கள் போய்க்கொண்டிருக்கையில், அப்பொழுது பார்த்திருந்து பராதீனனாகையால் அவர்களைப் பின்றொடர்ந்து போக நேராமல் நான் திரும்பி வந்தனன். ராமன் வனத்திற்கு ப்ரயாணமாய்ப் புறப்பட்டுப் போனவுடனே நான் திரும்பிவிட்டனன். திரும்பினபோதிலும் என் குதிரைகள் ராமவியோக துக்கத்தினுல் மிகவும் உஷ்ணமாக மூச்சுவிட்டுக்கொண்டு வழியில் ஸரியாய் நடந்து செல்லாமல் இடக்கு பண்ணிக்கொண்டிருந்தன. பிறகு நான் ராஜகுமாரர்கள் இருவர்க்கும் அஞ்ஜலி செய்து ரதத்தில் ஏறிக்கொண்டு அடக்க முடியாத அந்த மனவருத்தம் முழுவதையும் அடக்கிக்கொண்டு ப்ரயாணமாய்ப் புறப்பட்டனன். நான் அந்த ச்ருங்கிபேர புரத்திலேயே 'திரும்பியும் என்னை ராமன் சாரர்கள் மூலமாக வரவழைப்பானோ' என்னும் ஆசையினுல் குஹனுடன்

கூடப் [1] பலதினங்கள் வஸித்திருந்தனன். மஹாராஜனே!

---

1 இங்கு (பலதினங்கள்) என்ற விடத்தில் பலதினங்களென்றால்—மூன்று தினங்களென்று சிலர் கருத்து. வாஸ்தவமாகப் பாகத்தில்—செடியின் கீழ் ஒரு நாள், பரத்வாஜாஸ்ரமத்தில் இரண்டாவது நாள், யமுனைக் கரையில் மூன்றாவது நாள், நான்காவது நாள் சித்ரகூட ப்ரவேசம், ஐந்தாவது நாள் குஹனுடைய சாரர்கள் ராமவ்ருத்தாந்தம் தெரிவித்தல், ஆறாவது நாள் ஸுமந்த்ரன் அயோத்யைக்குப் புறப்படுதல். ஆகையால் ஆறு தினங்கள் ஆயின. அல்லது—இரண்டாவது நாள் பரத்வாஜாஸ்ரமத்தில் ராமன் சித்ரகூடத்திற்குப் போவதாக நிச்சயிக்கையால், அது தெரிந்து சாரர்கள் மூன்றாவது நாள் வந்து ஸுமந்த்ரனுக்குத் தெரிவிக்க, நான்காவது நாள் ஸுமந்த்ரன் புறப்பட்டானென்று நினைக்கலாமாயின், ச்ருங்கிபேரத்தில் மூன்று தினங்கள் இருந்ததாகத் தெரிய வருகின்றது, ஆகையால் 'பலதினங்கள்' என்றால் மூன்று தினங்களென்று கொள்ளவேண்டும். ராமவியோகத்தினால் ஒவ்வொரு தினமும் ஒரு கல்பம் போல் தோற்றுகையால் அம் மூன்று தினங்களையே பல தினங்களாகச் சொல்லினன். இங்ஙனம் கோவிந்தராஜா

ஸீதாராமலக்ஷ்மணர்கள் கங்கையைச் சேர்ந்து குஹனுடனிருந்த தினம் ஒன்று, கங்கையைத் தாண்டி ஆலமரத்தினடியில் இருந்த தினம் ஒன்று, ராமன் பரத்வாஜாஸ்ரமஞ் சேர்ந்தவன்றைத் தினம் அங்கிருந்து சாரர்கள் வந்த தினம் ஒன்று, ஆக மூன்று தினங்கள் ஆகின்றன. இவையே பலவென்று சொல்லப்பட்டன. ராமன் பரத்வாஜாஸ்ரமத்திற்குப் போய்ச் சேர்ந்த இரண்டாவது நாள் சாரர்கள் அங்கிருந்து வந்து ஸுமந்த்ரனுக்கு வ்ருத்தாந்தந் தெரிவிக்கையில், அவனும் அன்றைத்தினமே ப்ரயாணமாய்ப் புறப்பட்டு மூன்றாவது நாள் ஸாயங்காலம்-அதாவது—புறப்பட்ட தினத்தோடுகூட மூன்றாவது நாள் ஸாயங்காலம் அயோத்யையைச் சேர்ந்தனன். ஆகையால் 'ததஸ ஸாயாஹ்ந ஸமயே த்ருதீயேஹநி ஸாரயிஃ அயோத்யாம் ஸமநுப்ராப்ய நிராநந்தாம் ததர்ஸ ஹ' என்று அவன் மூன்றாவது நாள் அயோத்யையைச் சேர்ந்தானென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் (த்ருதீயேஹநி) என்பதற்கு ஸ்ருங்கிபேரபுரத்தினின்று புறப்பட்ட தினத்தோடு கூட மூன்றா

[1] உன் தேசத்திலுள்ள வ்ருக்ஷங்களும் கூட ராமவ்யஸனம் பொறுக்க முடியாமல் இளைத்துப் புஷ்பங்களோடும் தளிர்களோடும் மொக்குகளோடும் வாடியிருக்கின்றன. இனி மனிதர்களைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? [2] நதிகளிலும் குளங்களிலும் குட்டைகளிலும் ஜலங்கள் கொ

வது நான் அயோத்யைக்குப் போய்ச் சேர்ந்தானென்று தெரிகின்றது. இங்ஙனம் மஹேச்வர தீர்த்தர்.

1 இதற்கு—'விஷயே தே மஹாராஜ ராமவ்யஸநகர்சிதா:। அபி வ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குரகோரகா:' என்பது மூலம். (மஹாராஜ) மஹாராஜனே! (விஷயே தே) உன் தேசத்தில், (ராமவ்யஸநகர்சிதா:) ராம துக்கம் பொறுக்கமாட்டாமல் இளைத்திருக்கிற, (வ்ருக்ஷா அபி) வ்ருக்ஷங்களும், அபி சப்தத்தினால் கொடிகள் முதலியவற்றையுங் கொள்ளவேண்டும். பருப்பருத்த வ்ருக்ஷங்களுக்கே இந்தக்கதியாயின் சிறிய கொடிகளுக்குச் சொல்லவேண்டுமோவென்று கருத்து. (ஸபுஷ்பாங்குரகோரகா:) புஷ்பங்களோடும் தளிர்களோடும் மொக்குகளோடுங் கூடவே. இதனால் வ்யாதி முதலியவற்றால் வ்ருக்ஷங்களில் ஏதோ ஒருபாகமே கெட்டுப்போயிற்றென்பது தடுக்கப்பட்டது. முழுவதும் கெட்டுப் போயிற்றென்றபடி. இதனால் வ்ருக்ஷாவயவங்களில் 'இளையது முற்றினது' என்னும் பேதமில்லாமல் எல்லா அவயவங்களும் ஒரேகாலத்தில் கெடுதியை அடைந்தனவென்று கருத்து.

2 இதற்கு 'உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச। பரிசுஷ்கபலாசாநி வநாந்யுபவநாநி ச' என்று மூலம். (நத்ய:) நதிகள், (உபதப்தோதகா:) கொதித்த ஜலமுடையவை. நதிகள் கொதித்தனவென்னாமல் அதிலுள்ள ஜலம் கொதிக்கின்றதென்கையால் ஜலத்தில் ஏதோ ஒரு பாகமன்றியே முழுவதும் அடிவரையில் கொதித்ததென்று பொருள். இதனால்—வெயில்பட்டுக் கொதித்துப்போனதன்றென்று ஏற்படுகின்றது. (பல்வலாநி ஸராம்ஸி ச) குட்டைகளும் குளங்களும். இதனால் சிறியதென்றும் பெரியதென்றும் வாசியில்லாமல் ஜலமுள்ள இடங்களெல்லாம் கொதித்தனவென்று கருத்து. (வநாநி) இடைவிடாமல் ஜலம் தேங்கி வளர்ப்பாரில்லாமல் வருமழை போமழைகளில் வளர்ந்தவையாகையால் கடினங்களாயிருப்பவை யென்றபடி. வெயில் முதலியவற்றிற்கு வாடாத வலிவையுடையவை யென்று

த்துக் கொண்டிருக்கின்றன. அரண்யங்களிலும் உத்யானவனங்களிலும் வ்ருக்ஷங்களின் இலைகள் எல்லாம் உலர்ந்திருக்கின்றன. அரண்யங்களில் ஜந்துக்கள் சலியாதிருக்கின்றன. க்ரூர ம்ருகங்கள் இரைக்காகத் திரிவதையும் இழந்துவிட்டன. ராமவியோக துக்கத்தினால் அரண்யங்கள் முழுவதும் நிச்சப்தமாயிருக்கின்றன. மன்னவனே! கொடிகள் உலர்ந்தழிவதனால் இலைகள் ஜலத்தில் மறையப் பெற்று, அந்த இலைகள் அழுகிப் பாழாய் விடுகையால் கலங்கிய ஜலமுடையவைகளாகித் தாமரைப் பூக்களும் வாடி வதங்கவும் மீன்களும் ஜலபக்ஷிகளும் மழுங்கி மறையவும் பெற்றுத் தாமரையோடைகள் அனைத்தும் கலக்கமுற்றிருக்கின்றன. ஜலத்திலுண்டாகும் புஷ்பங்களும் பூமியில் விளையும் பூக்களும், பின்னும் பழங்களும் காய்களும் முன்போல் உண்டாகாமல் வாஸனையும் ருசியும் சிறிதாயினும் விளங்கப்பெறாதிருக்கின்றன. இந்தப் பட்டணத்திலுள்ள உத்யான வனங்களெல்லாம் பக்ஷிகளின் இனிய நடைகளும் ஒலிகளும் ஓயப்பெற்றுப் பாழாயிருக்கின்றன. புருஷர்களிற் சிறந்தவனே! உத்யானங்களில் ஒன்றாவது என் மனத்திற்கு இனிதாகப் புலப்படவில்லை. நான் அயோத்யைக்குட் புகுந்தருகையில் அதில் ஒருவனாயினும் ஸந்தோஷத்தோடிருப்பவனாகத் தோற்றவில்லை. ஜனங்கள் எல்லோரும் என்னோடுகூட ராமன் வரக்காணாமையால் மனவருத்தம் மிகப் பெற்று அடிக்கடி பெருமூச்செறிந்துகொண்டிருக்கின்றனர். தேவனே! ராமனில்லாமல் இவ்விடம் திரும்பி வந்த ரதத்தைக் கண்டு ராஜமார்க்கத்திலுள்ள ஜனங்கள் எல்லோர்க்கும் துயரத்தி

கருத்து (உபவநாநி) ப்ரதிதினமும் ஜலம்வற்றாதிருக்குமாறு ஜலந்தேக்கி வளர்த்தவையாகையால் மெதுவாயிருப்பவை யென்றபடி. இவ்விரண்டும் (பரிசுஷ்கபலாசாநி) ஒரே க்ரியாக இலைகள் உலர்ந்துபோயின.

ளுல் கண்ணீர் ஆறுகப் பெருகி வந்தது. ஸ்த்ரீகள் மேல் மெத்தைகளிலும் விமானங்களிலும் உப்பரிகைகளிலும் ஏறிக்கொண்டு ராமனில்லாமல ரதம் மாத்ரம் வருவதைக் கண்டு ராமனைக் காணப் பெருமைக்கு வருந்தி ஹாஹாகாரஞ் செய்தனர். ஸ்த்ரீகள் மிகவும பரிதபித்து மேன்மேலும் வேகமாகக கண்ணீர் பெருகி வருவதனுல் மிகவும் அஞ்சனமு மை கரைந்து குலையப் பெறுகையால் நிர்மலமாய் விளங்குகின்ற நீண்ட கண்களுடன ஒருவரையொருவர் ஸ்பஷ்டமாகப் பாாக்க நேராமலே பாாததுக் கொண்டிருந்தனா. ராமனைப பற்றி மனவருத்தபபடும விஷயத்தில் சதருககளுக்காயினும் மித்ரர்களுக்காயினும உதாஸீனர்களுக்காயினும பேதமெனபது சிறிதாயினும் புலபபடவில்லை. எலலோரும ஒருவிதமாகவேவருத்தப்பட்டுககொண்டிருந்தனர். மஹாராஜனே! இவவயோத்யையிலுள்ள ஜனங்கள எல்லோரும் மனக்களிப்பினறி வருந்துகின்றனர். கஜங்களும் அப்வங்களும் வருத்தபபடுகினறன. மற்றை யெவ்விடத்திலும் ஜனங்களின் அழுகுரலினுல் ஸந்தோஷமென்பது சிறிதும் புலப்படாதிருககினறது. நீண்ட பெருமூச்சுககளின சப்தம்போல் ஹாஹாகாரங்கள் எழும்புகினறன. எங்குப்பார்த்தபோதிலும் ஆநநதமஉண்டாகாதிருக்கினறது. ராமனைக் காட்டுக்கு அனுப்பினதனுல எங்குப் பார்த்தபோதிலும மனவருத்தமே. ஆகையால் இவவயோத்யை புத்ரனைப் பிரிநத கௌஸலயைபோல எனககுப் புலபபடுகினறது'[1] எனறனன. இஙஙனம ஸாரதியாகிய ஸுமந்த்ரன் சொனன வார்த்தையைக கேட்டு மனனவன கண்

---

1 இது வரையில ராமனது ஸாவாதமதையை ரிஷி அனுஸந்தித்தாரென்று ப்ரபநதகத வஸ்து தவனி ஏற்படுகினறது. ப்ரபநதக்த வஸ்து த்வனியாவது—ஒா ப்ரபநதததில ஒரு கதை சொலலிககொண்டு வா, அதில மற்ரோா தாதபாயம் ஏற்படுவதே.

ணீர் கண்டத்தில் வந்தடைக்கையால் தழதழத்து மிகவுந் தீனமாகிய உரைகளை உரைத்துக் கொண்டே அந்த ஸாரதியைப் பார்த்து, [1] 'கைகேயியின் கருத்தெல்லாம் பாபத்திற்குப் பிறப்பிடம்; மேலும், அவள் பாபிஷ்ட வம்சத்திற் பிறந்தவளாகையால் அதற்குத் தகுந்தபடி பாபிஷ்டஸ்வபாவமுடையவளாயிருக்கின்றனள். அப்படிப்பட்ட கைகேயி 'ராமனைக் காட்டுக்கு அனுப்புவா'யென்று தூண்டுகையில், நான காரியாலோசனையில் ஸமர்த்தர்களாகிய பெரியோர்களோடு கலந்து விசாரஞ் செய்யாமற் போயினன். நான ஸ்னேஹிதர்களோடாவது மந்திரிகளோடாவது நகரத்து ஜனங்களோடாவது இந்த ராமனை அனுப்பும் விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்யாமற் போய் விட்டனன். அதுவுமன்றி ஓர் பெண்பிள்ளையினிடத்திலுள்ள மோஹத்தினால் முன்பின பாராமல திடீரென்று இந்தக் காரியத்தைச் செய்துவிட்டனன். ஸூதனே! அப்படி இல்லையாயின், நான் ஜன்மாந்தரத்திற் செய்த பாபவசத்தினால் இப்படி நடக்க வேண்டியதா யிருப்பதுபற்றி இந்த வ்யஸனம் மற்றையொரு ஹேதுவுமின்றி தெய்வாதீனமாக இக்குலம் பாழாகும்படிக்கு எமக்கு நேர்ந்திருக்கலாம். ஸூதா! உனக்கு எப்பொழுதாயினும் ஏதாயினும் உபகாரஞ் செய்திருப்பேனாயின், அதைப்பற்றி, நீ சீக்ரமாக என்னை ராமனிடங் கொண்டு போய்ச் சேர்ப்பிக்க

1 ஸுமந்த்ரன், தசரதன் கேட்டவற்றிற்கு உத்தரஞ் சொலலி அத்தோடு நிலலாமல ராஜ்யத்திலுளள மனுஷ்யாதிகள மனக்கலக்க முற்றிருப்பதைச சொலலிக் கொண்டிருக்கையில, அரசன் தான் செய்தது அக்ருத்யமென்று தெரிவிக்கைக்காக ஸுமந்த்ரன் அங்ஙனம் சொலலுகிறானென்று தெரிந்து தான் செயதது அக்ருத்யமே யென்று அங்கீகரித்து உத்தரஞ் சொலலுகின்றான்—(கைகேயியின் கருத்தெல்லாம் பாபத்திறகுப் பிறப்பிடம்) என்றது முதலாக.

வேண்டும். என் ப்ராணன்கள் கிளம்பிப் போகின்றவை போலிருக்கின்றன வாகையால் அவையே என்னை அவஸரப்படுத்துகின்றன. இப்பொழுதும் எனது ஆஜ்ஞையே செல்லுமாயின், ராமனைத் திருப்பி அழைத்துக் கொண்டு வருவாயாக. ராமனைப் பிரிந்து நான் ஒரு முஹூர்த்தகாலமாயினும் ஜீவித்திருக்கப் பொறேன். இல்லையாயின், ஒருக்கால் அம் மஹாபாஹு வெகுதூரம் போயிருக்கக் கூடும்; ஆகையால் அவனைத் திருப்பி அழைத்துக் கொண்டு வருவதைக் காட்டிலும் என்னையே ரதத்தில் ஏற்றி அழைத்துக்கொண்டு போய்ச் சீக்ரத்தில் ராமனுக்குக் காட்டுவாயாக, குறுக்கத்தியின் மொக்குபோல் குண்டுகுண்டாய் விளங்கும் பல் வரிசைகள் பொருந்தியவனும் பெருவில்லாளியுமாகிய லக்ஷ்மணனுக்குத் தமையன் ராமன் எங்கே இருக்கின்றனன்? அவன் எங்கே? சாகப் போகிற நான் எங்கே? இப்படிப்பட்ட மஹாநுபாவனாகிய இந்த ராமனை ஸீதையுடன்கூடப் பார்க்கப்பெறுவேனாயின் பிழைத்திருப்பேன். இல்லையென்றால் என் ப்ராணன்கள் நில்லா. சிவந்த கடைக்கண்கள் அமையப் பெற்று நீண்ட புஜதண்டங்களுடையவனாகி ரத்னங்களிழைத்த அழகிய குண்டலங்கள் அணிந்து விளங்குகின்ற ஸ்ரீராமபிரானைக் காணப் பெறேனாயின், யமலோகத்திற்குப் போவேனன்றி வேறில்லை. இப்படிப்பட்ட நான் இவ்வளவு துக்கஸ்திதி அடைந்திருக்கும் பொழுதும் இக்ஷ்வாகுகுலகுமாரனாகிய ராமனைக் கண்களாரக் காண நேராதிருக்கின்றேனே! எனக்கு இதைக்காட்டிலும் துக்கம் வேறு யாதிருக்கின்றது? ஐயோ! ராமா! ஐயோ! லக்ஷ்மணா! ஆ! ஸீதே! உன்னைப்பற்றி நிரம்பவும் சோகிக்க வேண்டியதாயிருக்கின்றது. நான் இவ்விடத்தில் அநாதன்போல் மனவருத்தமுற்றுச் செத்துப் போகின்றனன். இது உங்களுக்குத்

தெரியாது' என்று இங்ஙனம் புலம்பினன். அரசன் அந்த மனவருத்தத்தினால் மனத்தை நிலைநிறுத்தி ஸ்வஸ்தனா யிருக்க முடியாமல் சோகஸமுத்ரத்தில் ஆழ்ந்து கௌஸல்யையைப் பார்த்து 'தேவீ! எனக்குச் சோகம் இவ்வளவு அவ்வளவென்ன முடியாமல் ஸமுத்ரம்போல் பொங்கி வருகின்றது. இந்தச் சோகஸாகரத்திற்கு ராமதுக்கமே ப்ரவாஹத்தின் பரப்பு. ஸீதையை விட்டுப் பிரிவதே இதற்குக் கரை. பெரிய நெடுமூச்செறிகையே இதற்கு அலைகளும் சுழிகளும். கண்ணீரே இதில் நுரைகளுடன் கூடிய கலக்கமுள்ள ஜலம். கைகளை உதறுதலே மீன்களின் துள்ளல்களாகும். [1]ரோதனத்வனியே இந்த ஸமுத்ரத்தின் பெருங் கோஷம். அவிழ்ந்தலைகிற தலைமயிர்களே இதிலுள்ள வேலம் பாசிகள். கைகேயியே இதற்கு [2]வடவாக்னி. ஸமுத்ரம் மழைக்கு ஹேதுவாயிருப்பதுபோல் இதுவும் என் கண்ணீராகிற [3]மஹாவர்ஷத்திற்கு ஹேதுவாயிருக்கின்றது. கூனியின் துர்ப்போதனை வாக்யங்களே இதற்குப் பெரு முதலைகள். அந்தப் பாபிஷ்டையின் வரமே இதற்கு ஜலப்ரவாஹம் பொங்கி வருதலாகும். ராமனைத் துரத்துகையே இதற்கு வைசால்யம். இப்படிப்பட்ட சோக ஸமுத்ரத்தில் ஐயோ! கௌஸல்யே! மூழ்கிவிட்டனன். ராமன் இல்லாமல் நான் இதைத் தாண்ட வல்லனல்லேன்! நான் இப்பொழுது இவ்விடத்தில் ராமனையும் லக்ஷ்மணனையும் பார்க்க வேண்டுமென்று ஓயாமல் ஆசைப்பட்டபோதிலும் பார்க்க நேரப்பெறாதிருக்கின்றேனே! இதைக் காட்டிலும் அமங்கலம் மற்றொன்று யாதிருக்கின்றது?" என்றனன். இங்ஙனம் மஹாகீர்த்திசாலியாகிய அம்மஹீபாலன் புலம்பிக் கொண்டே மூர்ச்சை அடைந்து மஞ்சத்தின்மேல் வீழ்ந்தனன். இவ்வண்ணம் ராமனை நினைத்துக்

1. அழுகுரல். 2. ஸமுத்ரத்திடையிலிருக்கும் ஓர் அக்னி. 3. பெருமழை.

லாந் துறப்பாயாக. மேலும், இந்த மனஸ்தாபத்தையும் மாற்றிக் கொள்வாயாக. ஏனென்னில்? ராமன் கொஞ்சமாயினும் மனஸ்தாபமின்றி வனத்தில் ஸந்தோஷமாயிருக்கின்றனன், லக்ஷ்மணனும் தர்மத்தை அறிந்தவனாகையால் இந்த்ரியஸௌக்யங்களில் காதல் தவிர்ந்து வனத்தில் ராமனது பாதாரவிந்தங்களுக்குப் பணிவிடை செய்துகொண்டு பரலோகத்தை ஸாதிக்கின்றனன். ஸீதையும் ஜனஸஞ்சாரமில்லாத வனத்திலிருந்தும், தன்வீட்டிற்போலவே பயமின்றி மிகுந்த ஸந்தோஷம் உண்டாகப் பெற்று ப்ரேமத்துடன் ராமனிடத்திலேயே மனதைச் செலுத்தியிருந்து மனக்களிப்புற்றிருக்கின்றனள். வனவாஸ துக்கமென்பதுவும் எள்ளளவாயினும் ஸீதைக்கு உண்டாகவில்லை. ஆகையால் ஸீதையும் வனவாஸத்திற்கு உரியவளென்றே எனக்குத் தோற்றுகின்றது. ஸீதை முன்பு இவ்விடத்தில் நகரத்திலுள்ள உத்யானவனங்களில் க்ரீடித்துக்கொண்டிருப்பதுபோலவே இப்பொழுது ஜனஸஞ்சாரமில்லாத அரண்யப்ரதேசங்களிலும் க்ரீடித்துக்கொண்டிருக்கின்றனள். பூர்ணசந்த்ரனை நிகர்த்த அழகிய முகத்துடன் கூடிய பதிவ்ரதையும் ஸந்தோஷம் பொருந்திய அந்த ஸீதை ராமனிடத்தில் மனம் பொருந்தப் பெற்று ஜனஸஞ்சாரமில்லாத வனப்ரதேசத்தில் குழந்தைபோல் நாடுகளை மறந்து துக்கத்தைப் பாராட்டாமல் விளையாடிக்கொண்டிருக்கின்றனள். மேலும், ராமனே அவளுக்கு லீலோத்யானம். அவள் வனவாஸஞ் செய்தபோதிலும் ராமனது அருகில் இருப்பதுபற்றி அவளுக்கு மனவருத்தம் தெரியாதிருக்கின்றது. ஸீதையினுடைய ஹ்ருதயமும் ப்ராணன்களும் ராமனுக்கு அதீனங்களாயிருக்கின்றன. ஆகையால் ராமன் இல்லையாயின இவ்வயோத்யையும் அவளுக்கு அரண்யம் போன்றதேயாகும். மார்க்கத்தில் போகும்பொழுது

ஸீதை அயோத்யைக்குக் கூப்பிடுதூரத்தில் விளையாடிக் கொண்டிருப்பதுபோல் ஸந்தோஷம் பெருகப் பெற்று க்ராமங்களையும் பட்டணங்களையும் நதிகளின் ப்ரவாஹங்களையும் நானாவித வ்ருக்ஷங்களையும் பார்த்து ராமனையோ அல்லது லக்ஷ்மணனையோ வினவுவாள்; இங்ஙனம் வினவி அவைகளின் பேர்களைத் தெரிந்துகொள்வாள். [1] ஸீதையைப் பற்றி நான் இப்பொழுது எவ்வளவு சொனனே

1 இதற்கு மூலம்—'இதமேவ ஸ்மராம்யஸ்யாஸ் ஸஹஸைவோ பஜல்பிதம் । கைகேயீஸம்ஶ்ரிதம் வாக்யம் நேதாநீம் ப்ரதிபாதி மா ॥ ஶீலம்ஸயித்வா தத் வாக்யம் ப்ரமாதாத்பர்யுபஸ்திதம்। ஹ்லாதநம் வசநம் ஸூதோ தேவ்யா மதுரமப்ரவீத்' அயோத்யையை விட்டு வரும்பொழுது கைகேயியைக் குறித்து ஸீதை பருஷமாகச சொன்ன ஒரு வார்த்தையை, கௌஸல்யைக்கு ப்ரியமாயிருக்குமென்று சொல்ல முயன்று, மீளவும், அதைக் கேட்பார்களாயின் அந்த வ்ருத்தர்கள ப்ராணன்களில் ஆசையை விட்டு விடுவார்களாகையால் அதைச சொல்லத் தகாதென்று நினைத்து அதை மறந்தாற் போல் வ்யாஜங் காட்டிச சொலலாமல் மறைத்துவிடுகின்றான். (இதமேவ ஸ்மராமி) இதை மாத்ரமே ஸ்மரிக்கின்றேன் ஸீதை சொன்ன வார்த்தைகள் இது வரையிலுமே எனக்கு ஜ்ஞாபகத்திற்கு வருகின்றனவே யன்றி, (கைகேயீ ஸம்ஶ்ரிதம்) கைகேயியைக் குறித்து, (ஸஹஸா ஏவ உபஜல்பிதம்) திடீரென்று ஸீதை மொழிந்த (வாக்யம்) வார்த்தை, (மாப்ரதி) எனக்கு (ந இதாநீம் பாதி) இப்பொழுது தோற்றவில்லை. என்று மொழிந்து (ப்ரமாதாத்பர்யுபஸ்திதம்) மனவூக்கந் தவறுதலால் வாய்க்கு வந்திருக்கிற, (தத் வாக்யம்) அந்த ஸீதையின் வார்த்தையை, (ஶீலம்ஸயித்வா) மறைத்து விட்டு, (தேவ்யாஃ) கௌஸல்யைக்கு (ஹ்லாதநம்) மனக்களிப்பை விளைப்பதும், (மதுரம்) இனியதுமாகிய, (வசநம்) வார்த்தையை, (அப்ரவீத்) சொன்னான். இதில் ஸீதையின் வார்த்தையை ஸூதன் (கைகேயீஸம்ஶ்ரிதம்=கைகேயியைக் குறித்து) என்று சொல்ல ஆரம்பித்தனன். (ஸஹஸைவோபஜல்பிதம்) திடீரென்று க்ரமந் தவறி அவள் சொல்லியதே அது நினைவுக்கு வாராமைக்குக் காரணமென்று தெரிவிததனன். மறுபடியும் நினைவு மூட்டிக்கொண்டு சொல்லென்பார்களோ என்னவோ

ஞே, அவ்வளவே எனக்கு நினைவுக்கு வருகின்றது. அ

என்று நினைத்து (இதமேவ ஸ்மராமி) இதுவரையிற் சொன்னவள வே எனக்கு ஜ்ஞாபகத்திற்கு வருகின்றதன்றி மற்றையது நினைவுக்கு வரவில்லையென்று அவர்கள விஞவுவதற்கு இடமிலலாமல செய்து விட்டனன். (இதாநீம்) நீஙகள இப்படி மனவருத்தப்படும் ஸமயத்தில் எனக்கு அது புத்திக்கு வரவில்லை யென்றனன். அது (ப்ரமாதாத்பர் யுபஸ்யிதம்) மனஷுக்கந் தவறுதலால் வாய்க்கு வந்தது பற்றியே (யிவம்ஸயித்வா) அதை மறைத்துவிட்டனன். வாய்க்கு வந்த அந்த வார்த்தை மனஸ்தாபத்திற்கிடமாயிருக்கு மென்பது பற்றியே அதை விட்டு (ஹ்லாதநம்) மனத்திற்கு ஸந்தோஷத்தை விளக்கும்படியா ன வார்த்தையைச் சொல்ல முயன்முனென்று கருத்து. இங்கு ஓர் ஸம்சயம் உண்டாகின்றது. ஸீதை திடீரென்று சொன்ன வார்த்தை கைகேயியைக் குறித்து நிந்தையாயிருப்பினும் கௌஸலயைக்கு மன ஸ்தாபத்தை விளக்குமாயின், அதை அவஸ்யமாக மறைத்தே ஆக வேண்டும். ஆஞல் அவ் வார்த்தை எப்படிப்பட்டது? அது இன்னதெ ன்று சொலவதற்கு ப்ரமாணம் யாது உளது? என்று வினவ வேண் டி வரும். ஆம். இது யுக்தமே. சொல்லுகிறேன். கேள. இப்படிப்பட்ட வாக்யதைக் கார்ய வசத்திஞல் மறைத்துவிட்ட போதிலும் அதை யேதாவதோரிடத்தில விவரித்துச சொல்லாராயின் ஸர்வஜ்ஞராயிரு ந்தும அவர் அதை இன்னதென்று எப்படி அறிந்திருக்கக்கூடும்? ஆகையால் அவர் அதை ஓரிடத்தில் சொல்லியே யிருக்கவேண்டும். இஙகு மனஷுக்கக் குறைவிஞல் சொல்ல ஆரம்பித்துக் கை கேயியைப் பற்றிய நிந்தையாயிருப்பினும் வ்ருத்தர்களாகிய அந்தக் கௌஸல்யா தசரதர்களுக்கு மனஸ்தாபகரமாயிருக்குமென்று மறை த்ததாகச சொன்ன ஸீதா வசனத்தைக் கவி மேல் ஓரிடத்தில் ஸ்ப ஷ்டமாகச சொல்லப் போகின்றனர். ஆனதுபற்றியே இங்கு ஸங்க்ஷ மமாகச சொலலி மறைத்து விட்டதாகச சொலலினர். ஆஞல மே விற் சொன்ன விடந்தான் யாதெனில்—யுத்த காண்டத்தில் ஸீதை யைக் குறித்து 'விஜ்ஞர்ஹோஉத்ர கைகேயீம் க்ரோஸநதீ குரரீ யயா' (அழுகுரல் பக்ஷிபோல அழுதுகொண்டு இவ் விஷயத்தில் கைகேயி யை நிந்தித்தனள்) என்று சொலலி அந்தக் கைகேயியைக் குறித்து ஸீதை சொல்லிய வார்த்தையையே 'ஸகாமா ஹவ கைகேயி ஹதோ

உயம் குலநந்தநஃ' (குலத்திற்கு ஆநந்தத்தைக் கொடுக்குந் தன்மை யனுகிய இம் மஹாநுபாவனைப் பாழாக்கிவிட்டனை. கைகேயியே! நீ இனி உன் கருத்தெல்லாமீடேறப் பெறுவாயாக) என்று மொழிந்தனர் அந்தக் கைகேயிக்குக் கருத்து யாது? கைகேயிக்கு ராஜ்யங் கிடைத்த மாத்ரத்திலேயே அவளபிப்ராயம் ஸித்தித்துவிட்டது. ஆகையால் ராமனை அரண்யத்திற்கு அனுப்பவேண்டிய அவஸ்யமில்லை. ஆயினும் ராமனைத் துரத்தி அனுப்பினளாகையால் அதற்கு அவளது அபிப்ராயம் என்னவெனில்—ராமனை ஊரைவிட்டுத் துரத்திவிட்டோமாயின் அவனை க்ஷணகாலமாயினும் பிரிந்திருக்கப் பொருளாகையால் ஸீதையுங் கூட அவனைப் பின் சென்று போய் விடுவாள். அவள் லோகோத்தர ஸௌந்தரியாகையால் அரண்யத்தில் எவரேயினும் இவளை அபஹரித்துக்கொண்டு போய்விடுவான். அவள் இங்ஙனம் அபஹரிக்கப்படுகையில், ராமனும் அவளை விட்டுப் பிரிந்திருக்கப் பொருளுகையால் தானுகவே நசித்துப் போய்விடுவான் அப்பொழுது ராஜ்யம் எனக்கு நிரம்பவும் ஸ்திரமாகக் குதிர்ந்துவிடும். அப்படி ராமன் நசித்துப் போகாதிருப்பானுயின், ஜனங்களெல்லோரும் ராம குணங்களில் கால் தாழ்ந்தவர்களாகையால் அவனுக்கே விதேயர்களாய் விடுவார்கள். அப்பொழுது ராஜ்யம் கிடைத்ததாயினும் ப்ரயோஜனம் இல்லை. ஆகையால் ராமன் பாழாய்விடவேண்டுமென்று கைகேயியின் கருத்தாக ஸீதை அபிப்ராயப்பட்டனள். ஆனதுபற்றியே—'ஸகாமா பவ கைகேயி ஹதோஉயம் குலநந்தநஃ' என்றனள். ஸீதை சொல்லிய அவ்வபிப்ராயத்தையே ராமனும் அரண்ய காண்டத்தில் 'கச்சித் ஸகாமா கைகேயீ ஸுகிதா ஸா பவிஷ்யதி, யாநதுஷ்யதி ராஜ்யேந புத்ரார்த்தே தீர்கதர்சிநீ'(தன் புதல்வன் விஷயமான தீர்க்காலோசனையுடையவளாகையால் ராஜ்யம் பெற்ற மாத்ரத்தில் த்ருப்தி அடையாத கைகேயி இப்பொழுது தன் கருத்தெல்லாம் ஈடேறப் பெற்று ஸுகித்திருப்பாளல்லவா?) என்று ராஜ்யம் பெற்ற மாத்ரத்தில் த்ருப்தி அடையாமல் தான் பாழாய்விடவேண்டுமென்று கைகேயி வேண்டினளென்று ஸூசிப்பித்தனன். மற்றோரிடத்தில்—'யதபிப்ரேதமஸ்மாஸு ப்ரியம் வரவ்ருதம் ச யத், கைகேய்யாஸ்தத் ஸுஸம்வ்ருத்தம் க்ஷிப்ரமத்யைவ லக்ஷ்மண' (கைகேயி

தை சொல்லினள். அது எனக்கு இப்பொழுது ஜ்ஞாபகத்

நம் விஷயததில் அபிப்ராயப் பட்டதும் அவளுக்கு ப்ரியமாயிருப்பதும் அவள் வரத்திற்குப் பலமாக.வேண்டினதும் யாதோ, அது அவளுக்கு இப்பொழுது சீகரமாகவே நிறைவேறி விட்டது.) என்று தம விநாசத்தை மனத்தில் வைத்துக் கொண்டே தம்மை அரண்யத்திற்குத் துரத்தும்படி வரம் வேண்டினளென்று ஸூசிப்பித்தனன. இவ்வபிப்ராயமே ஸீதைக்கும் உண்டாயிருக்கிறதென்று ஸுமந்தரன் பூர்வ ஸர்க்கததில் ஸூசிப்பிததிருக்கின்றனன். எப்படி யென்னில்—'ஜாநகீது மஹாராஜ நிஶ்ஶ்வஸந்தீ தபஸ்விநீ। ஸூதோபஹதசித்தேவ விஷ்டிதா விஸ்மிதா ஸ்யிதா॥ அத்ருஷ்டபூர்வவ்யஸநா ராஜபுத்ரீ யஶஸ்விநீ। தேந து:கேந ருததீ நைவ மாம் கிஞ்சிதப்ரவீத்॥ உதீக்ஷமாணா பர்த்தாரம் முகேந பரிஶுஷ்யதா। முமோச ஸஹஸா வாஷ்பம் மாம் ப்ரயாந்த முதீக்ஷ்ய ஸா' (மஹாராஜனே! சோகிக்க வேண்டியவளா யிருக்கின்ற ஸீதை நெடுமூசசுகள எறிந்துகொண்டு பூதாவேசங் கொண்டவளபோல் இருந்து முகத்தில இயறகையாகவே புலப்படும் புன்சிரிப்புமின்றி அசையாமல திகைதது நின்றனள. மிகவும் புகழ் பொருந்திய அந்த ஜனகமஹாராஜன்மகள இதுவரையில எந்நாளும் துககத்தை அனுபவிக்காதவள; ஆகையால அங்ஙனம் மன வருததததில் ஆழ்ந்து கதறிக்கொண்டே ஒன்றுந் தோற்றப் பெறாமல என்னைப் பார்த்து ஒன்றுஞ் சொலலவில்லை. முகம் வாடப்பெற்று பர்த்தாவின் முகத்தைப் பார்த்துக் கொண்டே ப்ரயாணமாய்ப் புறப்படுகின்ற என்னையும் பார்த்து அவள் திடீரென்று கண்ணீர் விட்டனள்.) இதில்—ரோதனஞ் செய்தல், பேசாதிருத்தல், முகம் வாடப் பெற்று பர்த்தாவின் முகத்தைப் பார்த்தல், மீளவும் ஸுமந்த்ரனைப் பார்ததல், கண்ணீர் விடுதல், ஆகிய இவைகளை ஸீதை செய்வதற்குக் காரணம் முன் சொல்லிய அபிப்ராயம் அவள் நினைவுக்கு வருவதே. ஆனதுபற்றியே அவள (விஷ்டிதா) ஸ்தம்பித்து நின்றனள. அதாவது—பர்த்தாவின் முகத்தைப் பார்க்கையால 'இதைச சொல்ல வாயெடாதே' என்னுங் கருத்தும், கண்ணீர் பெருக்குதலாலும் ஸூதனைப் பார்ப்பதனாலும்'மாமியாருக்கு இதைச் சொல்லி அனுப்பலாகாதே' என்னும் அபிப்ராயமும் தோற்றுவிக்கப் படுகின்றன. அந்த ஸர்க்கத்தில் ஸீதை பாாக்கில சொன்னதென்று

திற்கு வரவில்லை' என்று மனஊக்கந் தவறிச் சொல்ல ஆரம்பித்த அந்த ஸீதையின் வார்த்தையை மறந்தாற் போல் மறைத்துவிட்டுக் கௌஸல்யாதேவிக்கு முன்பு சொன்னவற்றைப் போலவே மனத்திற்கு இனிப்பைக் கொடுத்து மதுரமாயிருக்கும்படி 'அதிகமாக வழி நடந்த போதிலும், காற்று வேகமாக வீசினபோதிலும் புலி முதலியவற்றைப் பார்த்துக் கலக்கமுற்றிருந்தபோதிலும் வெயிற்பட்டு வதங்கினபோதிலும் சந்த்ரகிரணம் போல் விளங்குகின்ற அந்த ஸீதையின் சரீரகாந்தி மாறுதிருக்கின்றது. தாமரைப் பூவைநிகர்த்துப் பூர்ணசந்த்ரன்போல் காந்தி விளங்கப்பெறறு அழகாய்ப்பேசுந் தன்மையளாகிய அந்த வைதேஹியின் முகம் வழிநடப்பது முதலியவற்றால் தன் வர்ணம் மாறப் பெறுதிருக்கின்றது. அந்த ஸீதையின் பாதங்கள் இயற்கையாகவே செம்பஞ்சிக் குழம்பிடப் பெற்றாற்போல் சிவந்த காந்தியுடன் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும். அவை இப்பொழுது செம்பஞ்சிக்குழம் பிடுவது மாறப் பெற்றிருந்தபோதிலும் அரண்யத்தில் திரிந்து கொண்டிருந்தபோதிலும் தாமரைமொக்குபோல் ப்ரகாசிக்கின்றன. [1] அரண்யத்தில் ஸஞ்சரிக்கும் பொழுதும் அப் பெண்மணி பூஷணங்களிலுள்ள ஆசையால் சிலம்புத்தண்டை முதலியவற்றைத் தரித்து அத்துடன் நடக்

அதை மறைத்துவிட்டனன். இந்த ஸாககத்தில தானே மனவூககந் தவறிச சொல்ல வநது ஓர் வ்யாஜத்தினுல அதைச சொல்லாமல மறைத்துவிட்டானென்று தெரிகின்றது.

I இதற்கு மூலம்—' நூபுரோத்கஷ்டலேவ வேலங் கசதி பாமிநீ! இதாநீமபி வைதேஹீ தத்ராகாத ந்யஸ்தபூஷணு' ஸீதை ராமனேடு கூடப் போவதிலுள்ள ஆஸக்தியினுல வழி நடப்பதற்குத் தடையாயிருக்கும் பூஷணஙகளைக் கழற்றிவைத்து இப்பொழுதும் சிலம்புத் தண்டைகளின் கலகலதவனி உண்டாகும்படி நடக்கும் பொழுதுளள விலாஸத்தோடு கூடவே இனிய நடையுடன் போய்க்கொண்டிருக்கிருள்' என்று மற்ெருரு பொருள.

கும் பொழுதுண்டான கலகலத்வனியைக் கேட்டு வேடிக்கையாக நடப்பவள்; மிகவும் அழகாக நடந்து போகின்றனள். ஸீதை ராமனது பாஹுமத்யத்தை அடைந்திருப்பவளாகையால், பார்த்தவுடனே பயத்தைத் விளைக்கும்படியான பேருருவம் பொருந்திய யானையையாவது புலியையாவது ஸிம்ஹத்தையாவது பார்த்தபோதிலும், அந்த யானை புலி ஸிம்ஹம் முதலியவை இல்லாதபோதிலும் பயத்தை விளைவிக்கும்படியான அரண்யத்தி லிருந்தபோதிலும் பயமென்பது சிறிதும் உண்டாகப் பெறாதிருக்கின்றனள். பித்ருவசன பரிபாலனமென்கிற இச்சரித்ரம் உலகத்திலெங்கும் ஶாஶ்வதமாக விளங்கிவரப் போகின்றது. ஆகையால் அந்த ஸீதாராம லக்ஷ்மணர்களைக் குறித்தாவது நம்மைக்குறித்தாவது ராஜனைக் குறித்தாவது மனவருத்தப்படவேண்டிய அவஶ்யமில்லை. அவர்கள் சோகத்தைத் துறந்துவிட்டு மனத்தில ஸந்தோஷம் மிகப்பெற்று மஹர்ஷிகள் ஆசரிக்கும் மார்க்கத்தைத் திடமாகக் கைக்கொண்டு வனத்திலுண்டாகும் பழம் கிழங்குகளைத் தின்று வனங்களில் திரிந்து தந்தைசொல்லிய ஸத்யப்ரதிஜ்ஞையைப் பரிபாலித்துக் கொண்டிருக்கின்றார்கள்" என்றனன். கௌஸல்யாதேவி புத்ரசோகத்தினால் மிகவும் பரிதபித்துக் கொண்டிருப்பதனால், ஸுமந்த்ரன் அங்ஙனம் மிகவும் உத்தமங்களாகிய வசனங்களைச் சொல்லி எவ்வளவு ஸமாதானப் படுத்தினபோதிலும், 'என்னன்பனே! என் குழந்தாய்! ராமா!' என்று ஓயாமல் புலம்பிக்கொண்டே இருந்தனள். அறுபதாவது ஸர்க்கம். முற்றிற்று.

---

தசரதனைப் பார்த்துக் கௌஸல்யை ராமனைக் காட்டுக்கு அனுப்பியதைச் சொல்லிப் புலம்புதலும், அரசன் அது கேட்டு மூர்ச்சித்தலும்.

தர்மங்களை உணர்ந்தவனும் பிறரை மனக்களிப்புறச் செய்பவர்களில் மேன்மைபெற்றவனுமாகிய ராமன் இங்ஙனம் வனத்திற்குப் போகையில், கௌஸல்யை மிகவும் பரிதபித்துக்கொண்டு பர்த்தாவைப் பார்த்து 'ரகுவம்சத்திற் பிறந்தவனாகிய தசரதன் மிகுந்த மன இரக்கமுடையவன், மஹா தானசீலன், இனிய உரைகளையே உரைக்குந் தன்மையன்' என்று உன் பெருங்கீர்த்தி மூன்றுலோகங்களிலும் ப்ரஸித்தி பெற்றிருப்பினும், என்ன ப்ரயோஜனம்? அந்தப் பெருங்கீர்த்தியெல்லாம் ஒரு நொடிப்பொழுதில் பாழாகும்படி மிகுந்த அபகீர்த்தியை விளைக்கவல்லதாகிய இந்தக் கார்யத்தைச் செய்தனை. அரசர்களில தலைவனே! உனக்குப் பெருங்கீர்த்தி மூன்றுலோகங்களிலும் பரம்பி ப்ரகாசிக்கின்றதேயாயினும, இளம்பிராயமே பிடித்து ஸுகமாக வளர்ந்துவந்த உன் புதல்வர்களும் ஸீதையும் இப்பொழுது மனவருத்தத்தில் ஆழ்ந்து வனத்திலுண்டாகும் வருத்தங்களை எப்படி ஸஹிக்கப் போகின்றனர்? மன்னவனே! 'முதுமையில் பலவித வ்ரதோபவாஸங்களைச் செய்து மிகவும் ப்ரயாஸப்பட்டுப்பெற்ற மூத்தகுமாரனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து களிக்கவேண்டிய ஸமயத்தில் துரத்தியாயினும் ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றினன்' என்று உனக்கு உலகம் எங்கும் பெருங்கீர்த்தி பெருகிவருகின்றது; வாஸ்தவம். ராகவனும் தான் மஹா தானசீலனாகையாலும் மிகுந்த மனஇரக்கமுடையவனாகையாலும் இனிய உரைகளையே உரைக்குந் தன்மையனாகையாலும் 'எனக்கு முதலில் வாயால் தானஞ்செய்த

ராஜ்யத்தை நான் விடமாட்டேன்' என்று சொல்லப் பொருமையால் ராஜ்யத்தைக் கொடுத்துவிட்டனன். அதனல் அவனுக்கும் பெருங்கீர்த்தியே. ஆயினும் பால்யமே பிடித்து ஸுகமாக வளர்ந்துவந்த அப்புதல்வர்கள் இருவரும் 'வனம்போக நேர்ந்ததே'யென்று மனவருத்தமுற்று வனவாஸதுக்கத்தை எப்படி ஸஹிக்கப்போகின்றனர்? ஏறக்குறைய யௌவனப்பருவத்தின இடையில் ப்ரகாசிக்கின்றவளும் மிகுந்த ஸௌகுமார்யமுடையவளும் ஸுகானுபவத்திற்கே உரியவளுமாகிய அந்த ஸீதை இங்கு இதுவரையில் மிகுந்த ருசியுள்ள வ்யஞ்ஜனங்களோடு கூடிய மேலான ஆஹாரத்தை புஜித்துக்கொண்டிருந்து, இனி அடவியில் விளைகின்ற செந்நெலரிசியிற் செய்த ஆஹாரத்தை எப்படி புஜிக்கப் போகின்றனள்? எவவிதத்திலும் நிந்தைக்கிடமாகாத அந்த ஸீதை மங்கலகரமான கீதவாத்யத்வனிகளைக் கேட்டுக்கொண்டிருந்து இனி அரண்யத்திலுள்ள க்ரூரங்களாகிய ஸிம்ஹாதி ம்ருகங்களின் பயங்கரமான கர்ஜனையை எவ்வண்ணங் கேட்கப் போகின்றனள்? இந்த்ரத்வஜம்போல் மிகுந்த க்ஷேமங்களைக் கொடுக்க வல்லவையாகி விளங்குகின்ற நீண்ட புஜதண்டங்களையுடையவனும் மஹாபலனுமாகிய ராமன் உழல்தடியை நிகர்த்ததாகிய தனது புஜத்தையே தலையணையாக வைத்துக்கொண்டு அடவியில் எங்கே படுத்துக்கொண்டிருக்கிறானே? தாமரையிதழ் போன்ற ஒளி விளங்கப் பெற்றதும் அழகிய முன்னெற்றி மயிர்களோடு கூடியதும் தாமரைப்புஷ்பத்தின் வாஸனை அமைந்த மூச்சுக்காற்றுடையதும் தாமரையிதழ் போன்ற கண்கள் பொருந்தியதும் தனக்கு நிகரொன்று நேரப் பெறுமல் மேன்மையுற்றிருப்பதுமாகிய ராமனது முகத்தை எப்போது பார்க்கப் போகின்றேன? ராமனைக் கண்ணுரக் காண நேரப்

பெருதிருப்பினும் என் மனது ஆயிரஞ் சுக்கலாய் வெடித்துப் போகாதிருக்கின்றதே! ஆகையால் இது வஜ்ராயுதத்தின் ஸாரத்தை எடுத்துச்செய்யப்பட்டதென்பதற்கு ஸந்தேஹம் இல்லை. ஸுகத்திற்கு உரியவர்களும் எனது ஆப்த பந்துக்களுமாகிய அந்த ஸீதா ராமலக்ஷ்மணர்கள் நீ துரத்திவிடுகையால் பட்டணத்தைவிட்டு, தீனர்களாகி அடவியில் திரிகின்றார்களே! இது மிகவும் மன இரக்கமில்லாத கார்யம் அன்றோ? [1] ராமன் பதினைந்தாவது ஸம்வத்ஸரத்தில் திரும்பி இவ்விடத்திற்கு வருவானாயினும், பரதன் தன் கையிலுள்ள ராஜ்யத்தையும் பொக்கசத்தையும் விடுவானென்று எனக்குத் தோற்றவில்லை. ப்ராஹ்மணர்களிற் சிலர் ஶ்ராத்த கர்மஞ் செய்யும்பொழுது, மிகவும் உயர்வுள்ள ப்ராஹ்மணோத்தமர்கள் இருப்பினும், தாம் கொடுக்குந் தக்ஷிணைகள் தம்முடையவர்க்கே சேரவேண்டுமென்று நினைத்து, அப்பொழுது அந்த உத்தம ப்ராஹ்மணர்களை விட்டுத் தமக்கு பந்துக்களாயிருப்பவர்களையே புஜிப்பிக்கின்றார்களல்லவா? அங்ஙனம் ஶ்ராத்தகர்மம் முடிந்த பின்பு கீழ் உபேக்ஷித்த ப்ராஹ்மணோத்தமர்களை இஷ்டபங்க்தியில் புஜிப்பிக்க வேண்டுவார்கள். அவர்களில் குணங்கள் அமையப் பெற்றவர்களும் வித்வான்களும் தேவதைகளுக்கொப்பானவர்களுமாகிய ப்ராஹ்மணோத்தமர்களாயிருப்பவர், அங்ஙனம் தம்மை விட்டு

---

1. இதற்கு—ராமன் ஒருக்கால் பதினைந்தாவது ஸம்வத்ஸரத்தில் திரும்பி இவ்விடம் வருவானாயினும், இந்த ராஜ்யமும் இந்தப் பொக்கசமும், பரதனால அனுபவிக்கப்பட்டவை யாகையால் அப்படிப்பட்டவைகளைத் தான் துறப்பானே யன்றிக் கைப்பற்றமாட்டான்' என்று மற்றொரு பொருள்..

குணஹீனர்களுக்கு ச்ராத்தத்தில் போஜனமிட்டதுபற்றி, இஷ்டபங்க்தியில் தமக்கு அம்ருதங் கொடுப்பார்களாயினும், அதற்கு எள்ளளவும் ஸம்மதிக்கமாட்டார்கள். முதலில் புஜித்தவர்கள் ப்ராஹ்மணர்களேயாயினும் பின்னிட்ட ப்ராஹ்மணோத்தமர்கள், வ்ருஷபங்கள் தமது கொம்புகளை ஒடிப்பதற்குப் பொறுத்திருப்பதுபோல், குணஹீனர்களாகிய அவர்கள் புஜித்தபின்பு தாம் போஜனஞ் செய்ய ஸம்மதிக்கப் பொருர்கள். அரசனே! இங்ஙனம் பின் பிறந்தவனாகிய தம்பி அநுபவித்த ராஜ்யத்தைப் பெரியவனும் குணங்களில் சிறப்புற்றவனுமாகிய ராமன் ஏன் கிராகரிக்கமாட்டான்? பெரும் புலி மற்றொரு ம்ருகந் தின்று மிகுந்த பக்ஷயத்தைத் தின்னாது. அவனும் புருஷர்களில் பெரும்புலிபோல் மேன்மையுற்றிருப்பவனாகையால் பிறர் அநுபவித்த ஓர் வஸ்துவைப் பெரிதாக நினைக்கமாட்டான். சருமுதலிய ஹவிஸ்ஸும் ஹோமத்திற்கு வேண்டிய நெய்யும் புரோடாசமென்று சொல்லப்பட்ட மாவிற்செய்த பதார்த்தங்களும் தர்ப்பங்களும் கருங்காலி பலாசு முதலியவற்றாற் செய்யப்பட்ட யூபஸ்தம்பங்களும் ஒரு யாகத்தில் உபயோகப்பட்டிருக்குமாயின், மீளவும் அவைகளை மற்றொரு யாகத்தில் உபயோகப் படுத்தார்கள். அப்படியே ராமனும் திரும்பி இந்த ராஜ்யம் தனக்கு வருமாயினும், ஸாராம்சம் எடுக்கப் பெற்ற மத்யம் போலவும் மற்றொருவர் ஸோமபானஞ் செய்யப் பெற்ற யாகம் போலவும் நிஸ்ஸாரமாகிய இந்த ராஜ்யத்தைச் சிறிதும் விரும்பமாட்டான். (ராமன் மிகவும் கோபித்துக் கொண்டிருப்பானாயின், இப்படிப்பட்ட அவமானத்தை அவன் அடைந்தே யிருக்கமாட்டான். அவன் கோபித்துக் கொள்வானாயின், தீக்ஷ்ணங்களாகிய தனது பாணங்களால் மந்தரபர்வதத்தையும் இரு பிளவாகப் பிளந்துவிடுவான்.

தான் இப்படிப்பட்ட மஹானுபாவனாயினும், அவன் உன்னை மாத்ரம் தந்தை யெனகிற கௌரவத்தைப் பற்றி அடிக்க முயலான். ராமன் கோபமுறுவானாயின், சந்த்ர ஸூர்யர்களோடும் நக்ஷத்ரங்களோடுங் கூடிய ஆகாயத்தையாயினும் ஸ்வர்க்கத்தையாயினும் அறுத்துத் தள்ளிவிடுவான். நூறுநூறாகப் பர்வதங்கள் நிரம்பிய பூமண்டலம் முழுவதையும் கலக்கடித்து வெல்லவும் வல்லமையுள்ளவன். அபபடிப்பட்ட ஸமர்த்தனாயினும் அவன் உன்னை மாத்ரம் உல்லங்கனஞ் செயயாதிருக்கின்றனன்.) மிகுந்த பலமுள்ள பெரும்புலி தன வாலைபபிடித்திழுக்கப் பொறுக்கமாட்டாததுபோல, பலவானாகிய ராமனும் இப்படிப் பட்ட அவமானத்தைக் கொஞ்சமாயினும் ஸஹிக்கமாட்டான். உலகங்களெல்லாம் ஒன்று கூடி மஹாயுத்தத்தில் எதிர்த்து வந்தாலும், ராமனுக்குப் பயமெனபது சிறிதும் உண்டாகாது. ஆகையால அவன் பௌருஷங் கையிழந்து போகப் பெற்றவனன்று. மேலும், தர்மஸ்வபாவனாகையால், தர்ம மார்க்கத்தில நடந்து செலகின்ற உலகத்தை தர்மத்தில் நடக்கச் செய்கின்றவன். ஆனதுபற்றியே தான் தர்மந தவறலாகாதென்று அரண்யம் போயினன். ஓ மஹாராஜனே! மிகுநத பராக்ரமமுடையவனும் அதற்கேற்ற நீண்டபுஜதண்டங்களையுடையவனுமாகிய ராமன், ப்ரலய காலாக்னியானது பூமி ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்களைத் தஹிப்பதுபோல, ஸுவர்ணமயங்களாகிய பாணங்களைக்கொண்டு ஸமுத்ரத்தையாயினும் தஹித்துவிடுவான. அங்ஙனம வாயாலும் மனத்தாலும் அளவிட வொண்ணாத பராக்ரமம் பொருந்தி ஸிம்ஹம்போல் மிகுந்த பலமுடையவனும் வ்ருஷபம் போல் நீண்டகன்ற கண்களுடன் ப்ரகாசிக்கின்றவனுமாகிய அப்புருஷ சிகாமணியை, மீன் தன் குட்டியைக் கொல்வதுபோல், தந்தையே

தாஞகக் கொன்றுவிட்டனன். தர்மத்தில் நிலேநின்றிருக்குந தன்மையஞகிய உன் புதல்வனே அரண்யத்திற்கு ஓடும்படி அனுப்பிவிட்டனே. இப்படிப்பட்ட உனக்கு ப்ராஹ்மணர்கள் ஆசரிப்பதும் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டதுமாகிய ஸஞதன தர்மம் உண்டா? உன்னேப்போன்றவனுக்கு அது எப்படி உண்டாகும்? மன்னவனே! ஸ்த்ரீக்கு முக்யமான முதல் கதி பர்த்தா ஒருவனே; இரண்டாவது புதல்வன்; மூன்ருவது பந்துக்கள்; இனி நான்காங் கதியாகிய ஸ்வாதந்த்ர்யம் இவ்வுலகத்திலேயே இல்லே. அம்மூன்று கதிகளிலும் முதலாவதாகிய நீ என் சக்களத்திக்கு உட்பட்டவஞகையால் எனக்கு இல்லாதவன்போன்ருய். இரண்டாங் கதியாகிய ராமனே வென்ருல் அரண்யம் போய்ச் சேர்ந்தனன். பர்த்தாவை யுடையவளாகையால் உன்னே விட்டு ராமனேப் பின் சென்று அரண்யம் போக நினேக்கலாகாது. அன்றியே எனக்குப் பந்துக்கள் தூர தேசத்திலிருக்கிருர்களாகையால் அவர்களும் இல்லேயென்றே சொல்லவேண்டும். எல்லாவிதத்திலும் நீ என்னேப் பாழாக்கி விட்டனே. உன் மந்த்ரிகளேயும் பாழாகச் செய்தனே. உன்னேயும் பாழாக்கிக் கொண்டனே. என் புதல்வனேயும் என்னேயும் நாசஞ் செய்தனே. பட்டணத்து ஜனங்களேயும நாசமாக்கிவிட்டனே. எவர் எப்படி ஆஞலென்? உனது அருமைப் புதல்வஞகிய பரதனும் உனது ஆசை நாயகியாகிய கைகேயியும் மிக்க மனக்களிபபுற்றிருககிருர்கள் அல்லவா?' எனறனள். இங்ஙனம் பயங்கரமாகச் செவியிற் படுகின்ற அந்த வார்த்தைகளேக் கேட்டு மஹாராஜன் மனவருத்தமுற்று மூர்ச்சை யடைந்தனன. பிறகு கொஞ்சநேரங் கழிதது மூர்ச்சை தெளியப்பெற்று, அநத துக்கத்திற்குக் காரணமாகிய தன் பூர்வஜனம துஷ்க்ருதத்தை நினேத்துக்கொண்டு, மீளவும் சோகமுற்றனன்.

அறுபத்தொன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

மூர்ச்சை தெளிந்த மன்னவனைக் கௌஸல்யை ஸமாதானப்படுத்துவதும், கௌஸல்யை தான் பருஷவாக்யங்களை சொன்னதற்கு ராஜாவிடம் மன்னிக்கும்படி வேண்டிக்கொள்வதும், சோகத்தினால் மன்னவன் நித்ரை போதலும்.

இங்ஙனம் கௌஸல்யை மிகுந்த மனவருத்தமுற்றுக் கோபித்துச் சொன்ன பருஷவாக்யங்கள் முழுவதும் செவியிற் படப்பெற்ற மன்னவன் மனவருத்தத்தி லாழ்ந்து 'தப்புக் கார்யஞ் செய்துவிட்டோமே' என்று சிந்தித்துக் கொண்டிருந்தனன். பகைவரைப் பறந்தோடச் செய்யவல்ல பராக்ரமசாலியாகிய அம்மன்னவன் அங்ஙனஞ் சிந்தித்துக் கொண்டிருந்து இந்த்ரியங்கள் கலங்கப் பெற்றுப் பிறகு வெகு நேரங் கழித்து மூர்ச்சை தெளியப்பெற்றனன். அவன் மூர்ச்சை தெளிந்தவுடனே அத்யுஷ்ணமாகப் பெருமூச்செறிந்துகொண்டு தன் பக்கத்திலிருக்கிற கௌஸல்யையைப் பார்த்து மீளவும் 'இப்படிப்பட்ட துக்கத்தை அனுபவிக்கும்படி நான் பூர்வஜன்மத்தில் ஏது பாபஞ் செய்தேனோ' என்று சிந்திக்கத் தொடங்கினான். அங்ஙனம் அவன் சிந்தித்துக்கொண்டிருக்கையில், லக்ஷ்யம் தன் கண்ணுக்குப் புலப்படாதிருப்பினும் அதன் சப்தத்தைப் பிடித்துக் குறி வைத்து அடிக்கும் வல்லமை யுடையவனாகையால், அந்த ஸாமர்த்யத்தினால் முன்பு தெரியாமல் என்ன பாப கார்யஞ் செய்தானோ, அது இப்பொழுது அம்மன்னவனுக்கு புத்தியிற் பட்டது. அந்த ப்ரபு முன்பு தான் செய்த பாபத்தினாலுண்டான சோகமும் ராமனைப் பற்றிய சோகமும் ஆக இரண்டும் மேலெழப் பெற்று மனங் கலங்கி மிகவும் பச்சாத்தாபமுற்றனன். அரசன் இரண்டு சோகங்களாலும் தஹிக்கப்பட்டுக் கிடு

கிடுவென்று நடுக்கமுற்றுத் தலை வணங்கப் பெற்றுக் கை களைக் குவித்துக்கொண்டு கௌஸல்யையை மனந் தெளி வுறச் செய்யும்பொருட்டு அவளைப் பார்த்து 'கௌஸல்யே! நீ என்னிடத்தில் அருள் புரியும்படி வேண்டுகின்றனன். இதோ உனக்கு அஞ்ஜலி செய்கின்றனன். நீ பகைவரிட த்திலுங்கூட மிகுந்த மன இரக்கமுடையவள். தேவீ! தர்மத்தைப் பராமர்சிக்குந் தன்மையராகிய உன்னைப் போன்ற ஸ்த்ரீகளுக்குக் குணமுடையவனாயினும்குணமற் றவனாயினும பர்த்தாவே ப்ரத்யக்ஷ தெய்வமன்றோ? அங்ங னம் பதிதேவதையாகிய (பர்த்தாவையே தெய்வமாக நினைத்திருக்கிற) நீ எப்பொழுதும் தர்மத்திலேயே ஆஸ க்தியுடையவள். உலகத்திலுள்ள ஏற்றக்குறைவுகளை அறி யுந் திறமுடையவள். இப்படிப்பட்ட உனக்கு எப்படிப் பட்ட மனவருத்தம் உண்டாயிருப்பினும் என்னை மிகவும் துயரமுறும்படி இப்படிப்பட்ட அப்ரியங்களை உரைப்பது யுக்தமன்று' என்றனன். அரசன் தீனனாகி மன இரக்கமு ண்டாகும்படிக்குச் சொன்ன அந்த வார்த்தைகளைக் கே ட்டுக் கௌஸல்யை, மேடைகளின் மீதிருந்து மழை ஜலம் கீழே விழும்பொருட்டு மரம் முதலியவற்றால் ஏற்படுத்தப் பட்ட ஜலதாரையானது புதிய மழை ஜலத்தைச் சலசல வென்று பெருக்குவதுபோல் கண்ணீர் பெருக்கினள். அ ந்தக் கௌஸல்யை 'பர்த்தாவை இங்ஙனம் மொழிந்தோ மே' என்று தர்மலோபத்திற்குப் பயப்பட்டுக் கதறிக் கொ ண்டே அரசனது அஞ்ஜலியைத் தாமரஸ புஷ்பத்தைப் போன்ற தன் கைகளால் எடுத்துத் தன் சிரத்திலிட்டுக் கொண்டு பரபரப்பினால் தழதழத்த உரைகளுடன் 'தே வா! என்மீது அருள் புரிய வேண்டும். தலைப்படத் தரை யில் வீழ்ந்து உனக்கு நமஸ்காரஞ் செய்து வேண்டுகின்ற னன். பர்த்தாவாகிய நீ என்னை யாசிக்கும்படி செய்து

கொண்டனன். ஆகையால் பாபிஷ்டையாயினேன். ஆன துபற்றி நான் உமக்குத் தாஸிபோல் நன்கு புடைக்கத்தகுந்தவளாயிருக்கின்றேன். வீரர்களில் தலைவனே! கொண்டாடத் தகுந்த புத்தியுடையோனுகிய பர்த்தாவானவன் தன்னை மிகவும் வேண்டிக்கொண்டு கலக்கந்தெளிவிக்குமபடி எவள் செய்வித்துக் கொள்வாளோ, அந்த ஸ்த்ரீ இரண்டு லோகத்திற்கும் ஆகமாட்டாள். அவளை இவ்வுலகத்திலுள்ளவர்களும் நிந்திப்பார்கள். பரலோகத்திலும் அவள் தண்டனைக்கிடமாவாள். தர்மங்களை உணர்ந்தவனே! நான் தர்மங்களை அறிவேன். நீ ஸத்யவாதியென்பதுந் தெரியும். ஆயினும் புத்ரசோகத்தினுல் பீடிக்கப்பட்டு முன் பின் பாராமல் ஏதோ உன்னைத் தகாத வார்த்தைகள் சொல்லினன். இவவளவே யாகையால் என்னை மன்னிக்கவேண்டும். சோகத்தினுல் தைர்யம் நசித்துப் போகும். சோகத்தினுல் கல்வியும் பாழாய்விடும். சோகம் எல்லாவற்றையுந் தொலைத்து விடுமாகையால் சோகத்தைப் போன்ற சத்ரு மற்றொருவனும் கிடையான். பகைவனது ஹஸ்தத்தினின்றும் திடீரென்று விழுந்த உதையையாயினும் பொறுக்கலாகும். அப்படியே திடீரென்று சோகம் மேலெழுமாயின், அது எவ்வளவு சிறியதாயினும், அதைப் பொறுத்திருக்க முடியாது. (வீரனே! தர்மஜ்ஞர்களும் வேதமோதினவர்களும் தர்மத்தைக் குறித்து எள்ளளவாயினும் ஸந்தேஹமின்றித் தெரிந்தவர்களுமாகிய மஹர்ஷிகளுங்கூட, 'சோகம் வந்து மனத்தை நன்றாகக் கலக்குகையில், மதி கெட்டு ஏமாறிப் போவார்கள்.) ராமன் வனவாஸஞ் செய்ய ஆரம்பித்து இப்போதைக்கு [1] ஐந்து ராத்ரிகள் ஆயின. அவ்வைந்து ராத்ரிகளும் துக்

1 தமஸாதீரததில முதல ராத்ரி; கஙகாதீரததில இரண்டாவது ராத்ரி; ப்ரயாக க்ஷேத்ரத்தில் நாலாவது ராத்ரி; யமுனாதீரத்தில்

கத்திஞல் மனக்களிப்பைத் துறந்திருக்கிற எனக்கு ஐந்து

ஐந்தாவது ராத்ரி; ஆருவது நாள ஸுமந்த்ரன், ராமன் சித்ரகூடத்திற்குப் போய்ச சேரப் போகிருனென்று தெரிந்து கொண்டு அன்றைத் தினம் ஸாயங்காலம் அயோத்யைக்கு வந்து சேர்ந்தனன். ஆகையால் இதுவரையில் ஐந்து ராத்ரிகள கணக்கிடப்பட்டனவென்று சிலர் கருத்து. மற்றைச சிலர்—கங்கையைத தாண்டும் வரையில் வனவாஸமாகக் கொளள நேராதாகையால அதைத் தாண்டின பின்பு ஆலமரத்தினடியிலும் பரத்வாஜாஶ்ரமத்திலும் யமுனாதீரத்திலும் சிதரகூடத்திலும் வரிசையாக நான்கு ராத்ரிகள கடந்தன. அந்த நான்காவது ராத்ரியினன்றே ஸுமந்த்ரன் புறப்பட்டனன். ஐந்தாவது ராத்ரி கௌஸல்யை அந்த வார்த்தை சொன்னாளாகையால, 'பஞ்சராத்ரோ உஷித மன்யதே' என்றவிடத்தில் (அஷித) (இப்போதைக்கு) என்றதற்கு இப்படி சொலவதே ஸரஸமாயிருக்குமென்று கூறுகின்றனர். இதன் வ்யவஸ்தை எப்படியெனில்—ஐம்பத்தேழாவது ஸர்க்கத்தில் 'ஹாஜீ வாஜாவி மமந° ப்ரயாமேச ஸஹாஸநம், ஆமிரோர் மமந° தேஷாம் தத்ரஸ்யைரவிலக்ஷிதம்' (அநத ஸீதாராம லக்ஷ்மணர்கள் பரத்வாஜாஶ்ரமத்திற்குப் போதல, ப்ரயாக க்ஷேத்ரத்தில் அம்முனிவரோடு கூட இருத்தல, சித்ரகூட பர்வதம் வரையில் போதல ஆகிய இவையெலலாம் அந்தக் குஹனது பட்டணத்திலுளள சாரர்களால் தெரியவந்தது) என்றிருக்கின்றது. ராமன் அயோத்யையை விட்டுப் புறப்பட்ட ஆருவது நாள் சித்ரகூடம் போய்ச சேர்ந்தனன். அஙகிருந்து சாரர்கள் ஏழாவது நாளோ எட்டாவது நாளோ ஶ்ருங்கிபேர புரத்திலிருக்கும் ஸுமந்த்ரனிடம் வந்து ராம வ்ருத்தாந்தத்தைத் தெரிவித்தனர். ஸுமந்த்ரனும் அங்கிருந்து புறப்பட்டு 'தத: ஸாயாஹ்ந ஸமயே த்ருதீயே஽ஹநி ஸாரயி:, அயோத்யாம் ஸமநுப்ராப்ய' என்று மூன்ருவது நாள் ஸாயஙகாலம் அயோத்யைக்கு வந்து சேர்ந்தனன்.அப்போதைக்கு ஏறக்குறையப் பத்துத் தினங்கள் ஆகின்றன. இப்படி யிருக்க, ஐந்து ராத்ரிகள் ஆயினவென்பது எப்படி ? என்னில்—'ஆமிரோர் மமநம்' என்பதற்கு (சித்ரகூட பர்வதத்திற்குப் போகும் வரையில்) என்ருல் (சித்ரகூட பர்வதத்திற்குப் போகத் தொடங்கின வரையிலும்) என்று பொருள கொள்ள வேண்டும். அப்பொழுது சாரர்கள பரத்வாஜாஶ்ரமத்திலேயே ராமன் சித்ரகூடத்திற்குப் போகத் தொடங்கினது அறிந்து அவ்விடத்தி

ஸம்வத்ஸரங்கள் போல் இருக்கின்றன. அவைகளை நினை

---

விருந்தே ஸுமந்த்ரானிருக்கு மிடத்திற்கு வரப் புறப்பட்டு நேர்வழியாக இரவும் பகலும் நடந்து வந்தார்களென்று தெரிகின்றது. 'ததஃ ஸாயாஹ்நஸமயே த்ருதீயேऽஹநி' என்றஇதற்கு (மூன்றாவது நாள ஸாயங்காலம்) என்று பொருளல்ல; ஆனால் எப்படியெனில்—(அந்த தினத்தின் மூன்றாவது பாகமாகிய ஸாயங்காலத்தில்) என்று பொருள கொள்ள வேணும். ஸுமந்த்ரன் ஸ்ருங்கிபேரபுரத்தில் 'ஷிவஸாந் பஹூந்' (வெகு நாள இருந்தான்) என்பதையும் மூன்று தினங்களிருந்தானென்பதாகக் கொள்ள வேண்டும். இந்த மூன்று தினங்களோடு தமஸாநதிக் கரையில தங்கியிருந்த தினத்தையுங் கூட்டிக் கொண்டால் அயோத்யையை விட்டு நான்கு தினங்கள ஆகின்றன. நான்காவது நாள ராமன் பரத்வாஜாஶ்ரமஞ் சென்று சேருகையால் சாரர்கள அங்கு ராமனது வ்ருத்தாந்தத்தைத் தெரிந்துகொண்டு நேர் வழியாகவே இரவும் பகலும் நடந்து மற்றை நாள ஸுமந்த்ரனுக்கு அந்த வ்ருத்தாந்தத்தைத் தெரிவிக்கையில், அவனும் அந்த ஐந்தாவது நாளே புறப்பட்டு அன்று ஸாயங்காலம் வேகமாக அயோத்யைக்கு வந்து சேர்ந்தனன். அந்த ஐந்தாவது நாள ராத்ரியே கௌஸல்யை 'பஞ்ச ராத்ரோऽத்ய க³ண்யதே' என்று 'அத்ய' என்னும் சப்தத்தைச் சேர்த்துச் சொன்னாளென்று தெரிகின்றது—என்று கோவிந்தராஜர்.

ராமன் ஆறாவது நாள் சித்ரகூடஞ் சேர்ந்தானல்லவா? ஸுமந்த்ரனும் ஆறாவது நாளே அயோத்யைக்கு வந்து சேர்ந்தனன். எப்படியென்னில்—ராமன் அயோத்யையை விட்டுப் புறப்பட்ட நான்காவது நாள பரத்வாஜாஶ்ரமத்திற்குப்போய்ச் சேர்ந்தனன். அன்றைத் தினமே சாரர்கள் ராமவ்ருத்தாந்தத்தைத் தெரிந்துகொண்டு வந்து ஸுமந்த்ரனுக்குத் தெரிவிக்கையில, ஸுமந்த்ரனும் அந்த நான்காவது நாளே புறப்பட்டு 'ததஃ ஸாயாஹ்நஸமயே த்ருதீயேऽஹநி' என்கிறபடியே அந்தத் தினத்தோடுகூட மூன்றாவது நாள ஸாயங்காலம், அதாவது—ஆறாவது நாள் ஸாயங்காலம் அயோத்யைக்குச் சேர்ந்தனன். இதற்கு முன்பே ஐந்து ராத்ரிகள் ஆயினவாகையால் கௌஸல்யை பஞ்சராத்ரமென்றாளென்று தெரிகின்றது. இங்ஙனம் மஹேஶ்வர தீர்த்தர்.

இதில் 'ததஃ ஸாயாஹ்ந ஸமயே த்ருதீயேऽஹநி' என்கிற வித

த்தமாத்ரத்தில் தானே, நதீ வேகத்தினால் ஸமுத்ரஜலம் வளர்ந்து வருவது போல், என் மனத்தில் அந்தத் துயரம் பெருகி வருகின்றது' என்றனள். இங்ஙனம் கௌஸல்யை ஸமாதானம் உண்டாகும்படி நல்வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே ஸூர்யன் அஸ்தமித்தனன். ராத்ரியும் வந்து விட்டது. அரசன் அங்ஙனம் மொழிந்த கௌஸல்யையின் சுபவாக்யங்களால் மனக்கலக்கந் தீர்ந்து மிகவும் துக்காக்ராந்தனாயிருந்த போதிலும் நித்ரைக்கு வசமாயினன். அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

[தசரதன் கௌஸல்யையோடு தான் பூர்வத்தில ஸரயூநதிக்கருகில் ஒரு ரிஷி குமாரனை யானை யென்று நினைத்துக் கொன்ற வ்ருத்தாந்தத்தைக் கூறுதல்.]

பிறகு தசரதமஹாராஜன் ஒரு முஹூர்த்தகாலங் கழிந்தவுடனே விழித்துக்கொண்டு சோகத்தினால் மதி மயங்கப் பெற்றுச் சிந்தையுற்றனன். தேவேந்த்ரனை நிகர்த்த அந்தத் தசரத மன்னவன் ராமலக்ஷ்மணர்களை வனத்திற்கு அனுப்பினதால், ராஹுவினால் பீடிக்கப்பட்ட ஸூர்யன்போல் மிகவும் உபத்ரவம் அடைந்தனன். ராமன் பார்யையோடுகூட வனத்திற்குப் போகையில், அந்தக் கோஸலாதிபதியாகிய தசரதன் தான் முன்பு நடத்தின பாபகார்யத்தை நினைத்துக்கொண்டு கறுத்தழகிய கடை

---

ற்கு கோவிந்தராஜர்—அன்றைத் தினத்து மூன்றாவது பாகமாகிய ஸாயங்கால மென்றும், மஹேஶ்வர தீர்த்தர்—மூன்றாவது நாள் ஸாயங்கால மென்றும் பொருள் கூறுவதாகத் தெரிய வருகின்றது.

க்கண்களையுடைய கௌஸல்யையைப் பார்த்துச் சொல்ல விருப்பமுற்றனன். ராமனை அரண்யத்திற்கு அனுப்பிய பின்பு அந்தத் தசரதமஹாராஜன் ஆறுவது ராத்ரியின் அர்த்தராத்ரியில் முன்பு தான் செய்த பாப கார்யத்தை நினைத்துக்கொண்டிருந்தனன். அங்ஙனம் புத்ரசோகத்தினால் பரிதபிக்கின்ற அம்மன்னவன் தான் பூர்வத்தில் செய்த துஷ்க்ருத்யத்தை நினைத்துக் கொண்டு தன்னைப் போலவே புத்ரசோகத்தினால் புலம்பிக் கொண்டிருக்கிற கௌஸல்யையைப் பார்த்து 'மங்கல ஸ்வபாவ முடையவளே! க்ஷேமத்தை விளைவிப்பவளே! ஒருவன் பிறருக்கு நல்லதாவது கெட்டதாவது ஏதாவதொரு கார்யத்தைச் செய்வானாயின், அதனால் பிறர்க்கு விளையும் பலத்தைப் போன்ற பலத்தையே தானும் அனுபவிப்பான். எவன் கார்யத்தைச் செய்ய ஆரம்பிக்கும் பொழுது அதன் பலத்தினுடைய ஏற்றக்குறைவுகளையாவது அந்தப் பலத்தாலுண்டாகும் ஸுகத்தையும் துக்கத்தையுமாவது தெரிந்து கொள்ளானோ, அவனே மூடனென்று சொல்லப் படுவான். எவனாவதொருவன், புஷ்பம் எவ்வளவோ, அவ்வளவே பலமும் விளையுமென்று புஷ்பத்தைப் பார்த்து பலத்தில் பேராசையுடையவனாகி, மாம்பூ சிறியதும் வர்ணமில்லாதிருப்பதுமாகையால் அந்த வ்ருக்ஷத்தின் பலம் சிறியதாகவே யிருக்குமென்றும், பெரியதும் அழகிய வர்ணம் பொருந்தியதுமாகிய பலாசின் புஷ்பங்களைப் பார்த்து அந்த வ்ருக்ஷத்தின் பலம் பெரிதாயிருக்குமென்றும் ஆலோசித்துக் கொண்டு மாந்தோப்புகளை யெல்லாம் வெட்டி வேரைக்களைந்து பலாச வ்ருக்ஷங்களை வைத்து ஜலம் பாய்ச்சி வளர்ப்பானாயின், அவன் பலமுண்டாகுங் காலத்தில் பலாசவ்ருக்ஷத்தில் தான் எதிர்பார்த்திருந்த மஹா பலத்தைக் காணாமல் மனவருத்தமுறுவான். எவன் வரப்

போகிற பலந் தெரியாமல் மனத்திற்குத் தோன்றியபடி கார்யங்களைச் செய்துகொண்டிருப்பாரோ, அவன் மாமரங்களை வெட்டிப் பலாசமரங்களை நீர் வார்த்து வளர்ப்பவன்போல் பலகாலத்தில் மனவருத்தப் படுவான். ராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யவேண்டி யிருக்க, அது செய்யாமல் அவனை அரண்யத்திற்கு அனுப்பிக் கைகேயிக்கு ப்ரியஞ் செய்தவனாகிய நான் மாந் தோப்புகளை வெட்டிப் பலாச வ்ருக்ஷங்களை ஜலம் வார்த்து வளர்ப்பவனாய் விட்டனன். ஆனதுபற்றி நான் இங்ஙனம் புத்தி கெட்டுப் பலம் பெறவேண்டிய காலத்தில் அப்படிப்பட்ட அசுபகார்யத்தைச் செய்ததற்குப் பலமாக ராமனைப் பிரிந்து, பிறகு அவனை விட்டுப் பிரிந்த பலத்தை அனுபவித்துக்கொண்டு துக்கிக்கின்றனன். கௌஸல்யே! நான் குமாரனாயிருக்குந் தசையில் நல்ல வில்லாளியாகி 'இந்தப் பயல் சப்தத்தையே குறியாகக் கொண்டு அடிக்க வல்லவன' என்று ப்ரஸித்தி பெற்றிருந்தனன். அந்த இளமைப் பருவத்தில் இந்தப் பாபத்தைச் செய்தனன். கர்மபலம் லோகாந்தரத்திலேயோ, அல்லது—இதர ஜன்மத்திலேயோ விளையுமென்பது உண்டு. எனக்கோ வென்றால்—உலகத்தில் வாலிபனாயிருப்பவன் அஜ்ஞானத்தினால் விஷத்தைத் தின்பானாயின், உடனே அவனுக்கு அது துக்கத்தை விளைப்பது போல், எனக்குள் தெரியாமையால் செய்த பாபத்தின் பலமாக இந்த மனவருத்தம் இதோ உடனே ஸம்பவித்தது. ஸாமான்யனாயிருப்பானொருவன் புஷ்பத்தைப் போலவே பலமும் இருக்குமென்று நினைத்துப் பலாசின் புஷ்பங்கள் அழகாயிருப்பது கண்டு அதனுடைய பலங்களும் நன்றாயிருக்குமென்று ப்ரமிப்பதுபோல் நானும் ம்ருகங்களின் சப்தத்தையே குறியாகப் பிடித்துப் பாணங்களால் அவைகளை அடித்து அதனால் எனக்கு உலகமெங்

கும் பரந்து விளைந்த ப்ரஸித்தியைக் கண்டு, அதன் பல மும் அப்படியே உலகம் முழுவதிலும் புகழத்தக்கதாயிரு க்குமென்று ப்ரமித்து, அதனுலுண்டாகக் கூடிய அனர் த்த பலத்தை அறியாமற் போயினன். தேவீ! உனக்கு அப்பொழுது விவாஹம் ஆகவில்லை. என் தந்தையும் இரு ந்தனர். நான் அப்பொழுது யுவராஜனுயிருந்தனன். பிற கு மதத்தையும் காமத்தையும் வளரச் செய்வதாகிய வர் ஷாகாலம் வந்தது. ஸூர்யன் தனது கிரணங்களால் பூமி யிலுள்ள ரஸத்தை இழுத்து உலகத்தைத் தபிக்கச் செ ய்து ப்ரேதங்கள் திரியப்பெற்று பயங்கரமாகிய தென் தி சைக்குப் போய்ச் சேர்ந்தனன். அப்பொழுது வெயில் கு றைந்து மறைந்தது. மேகங்கள் நீர் கொண்டு நிகுநிகெ னறு கறுத்துக் குளிர்ந்தவைகளாய்க் காணப்பட்டன. பி றகு தவளைகளும் சாதகப் பறவைகளும் மயில்களும் ஆ கிய இவை யெல்லாம் ஸந்தோஷித்தன. பக்ஷிகள் சிறகு களின் மேல்பாகங்களெல்லாம் நனையப்பெற்று ஸ்னாநஞ் செய்தாற்போல் புலப்பட்டு மழையினுலும் காற்றினுலும் அசைகின்ற நுனிகளையுடைய வ்ருக்ஷங்களின் மீது நனை ந்த றக்கைகளுடன் எப்படியோ கஷ்டப்பட்டுப் போய்ச் சேர்ந்தன. யானையானது தாரைதாரையாகத் தன் மேல் விழுந்தும் விழுந்துகொண்டிருக்கிற மழை ஜலத்தினுல் (அதாவது விடாமழையினுல்) மறைக்கப்பட்டு ஜலம் சுற் றிலும் சூழ்ந்த மலைபோலவும், அலைகளின்றி அசையாமலி ருக்கின்ற ஸமுத்ரம் போலவும ப்ரகாசித்துக் கொண்டிரு நதது. ஜலப்ரவாஹங்கள் தாம் இயற்கையாகவே அழுக கின்றி நிர்மலமா யிருப்பவைகளாயினும் வெளுத்தும் சிவ ந்தும் விளங்குகின்ற கைரிகதாதுக்கள் காவிக் கல்கள் வந்து சேருகையால்நானுவர்ணங்களுடையவையாகிப் பல வர்ணங்களுள்ள ஸர்ப்பம் போல் கோணல் கோணலாக

மலைகளினின்றும் பெருகி வந்தன. (ஜலப்ரவாஹங்கள் தாம் இயற்கையாகவே நிர்மலமாயிருப்பவையாயினும் மழை பெய்வதனால் கலங்கிச் சிவந்த ஜலமுடையவைகளாகித் தமது வழியைக் கடந்து மேட்டுப் புறங்களிலும் பாய்ந்துகொண்டிருந்தன.) மிகவும் ஸுகத்தை விளைப்பதாகிய அக் காலத்தில் நான் வேட்டையாட வேண்டுமென்று நிச்சயித்து வில்லையும் பாணத்தையும் தரித்து ரதத்தின் மீதேறிக்கொண்டு ஸரயூநதியைக் குறித்துப் போயினன். நானே, இந்த்ரியங்களை வெல்லப் பெறாத மூடனாகையால் அந்நதியில் இழிந்து ராத்ரியில் ஜலங் குடிக்குந் துறையில் காத்திருந்து ஜலங் குடிப்பதற்காகக் காட்டுக் கடாவாயினும் யானையாயினும் மற்றை க்ரூர ம்ருகம் ஏதாயினும் வருமாயின் அவைகளை அடிக்கலாமென்று விருப்புற்றிருந்தனன். அந்த ஸரயூநதிக் கரையில் அதன துறையில் நான் ராத்ரியில் ஒருவனேயாக, வில்லை நாணேற்றிப் பிடித்துக்கொண்டு மிக்க மனவூக்கத்துடன் ஜன ஸஞ்சாரமில்லாமையாலும் ராத்ரியாகையால் ஏகாந்தமாயுமிருக்கிற அவ்விடத்தில் நானொருவனேயாக இருக்கிற எனக்குச் செவியிற்பட்ட சப்தத்தைக் குறிசெய்து அந்நதிக்கரையில் வந்த ஓர் அரண்ய ம்ருகத்தை அடித்தனன். அதன் பிறகு மற்றொரு க்ரூரம்ருகத்தையுங் கொன்றனன்; அனந்தரம் காடாந்தகாரத்தில் கண்ணுக்குப் புலப்படாத இடத்தில் ஆற்றில் குடத்தில் ஜலம் மொள்ளுகிற த்வனியொன்று யானை கர்ஜிக்கிற சப்தம்போல் என் செவிக்குப் புலப்பட்டது. பிறகு ஸர்ப்பம்போல் ப்ரகாசிக்கின்ற பாணத்தை எடுத்து அந்த யானையைக் கொல்லவிரும்பி அந்த சப்தம் வந்த வழியைப்பிடித்து இன்ன இடத்தில் யானை இருக்குமென்று குறிவைத்து பாணத்தை யெய்தனன். நான் கூரான பாணத்தைப் பொகட்ட இடத்தினின்றுமே, நான பொக

ட்ட பாணம் மர்மத்தில் நன்கு படப்பெற்று வருந்தி ஜலத்தில் வீழ்கின்ற ஓர் முனிகுமாரன 'ஐயோ! ஐயோ!' என்று கத்தும் வார்த்தை விடியற்காலத்தில் ஸ்பஷ்டமாகச் செவிக்குப் புலப்பட்டது. அந்தப் பாணம் பொகட்டவுடனே அதுவிழுந்தஇடத்தினின்றும் 'நான் ரிஷியாயிற்றே! ஆகையால் எனக்குப் பகைவன் ஒருவனும் இல்லையே! இப்படிப்பட்ட எனமேல் பாணம் எப்படி விழுந்ததோ! நான் அர்த்தராத்ரிகாலத்தில், ஒருவனும் இல்லாதபொழுது ஆற்றினின்று ஜலம் கொண்டுபோவதற்காக வந்தனன். என்னை எவன் பாணம் பொகட்டு அடித்தனன்? நான் எவனுக்கு யாது அபகாரஞ்செய்தனன்? வாக்கு மனது சரீரம் ஆகிய இம்மூன்றினும் பிறர்க்குள்ளவாயினும் ஹிம்ஸை செய்யாமல் அரண்யத்தில் அகப்படுமவற்றைத்தின்று காலங்கழிக்கின்ற என்னைப் போன்ற ரிஷியை ஆயுதங்கொண்டு அடிப்பது எப்படி ஸம்பவித்தது? ஜடாபாரத்தைத் தரித்து மரவுரியையும் க்ருஷ்ணஜினத்தையும் உடுத்துத் திரிகின்ற எனனைக்கொன்று எவன் என்ன ப்ரயோஜனத்தைப் பெற விரும்பினனோ? அப்படிப்பட்டவனுக்கு நான் என்ன அபகாரஞ்செய்தனன்? இப்படிப்பட்ட கார்யம நடத்தினதால் கேவலம் அனர்த்தம் மாத்ரம் விளைந்ததேயன்றி மற்றை யாது பலமும் உண்டாகாது. இப்படி என்னைச் செய்தவன் எவனாயினும் அவனை நல்லவனாக நினைப்பார்களா? குருபார்யை யிடம் சென்ற மஹாபாதகனைப்போல் நினைப்பார்களேயன்றி வேறில்லை. என் ப்ராணன்கள் போவதுபற்றி நான அவ்வளவு துக்கப்படமாட்டேன், நான் செத்துப்போவேனாயின், என்னுடைய தாய் தந்தைகள் திக்கற்றவர்க ளாவார்களேயென்று நினைத்து வருத்தப்படுகிறேனன்றி வேறில்லை. வெகுகாலமாக நான் வ்ருத்தர்களாகிய இந்தத் தம்பதிகளைப் போஷித்துக்கொ

ண்டு வந்தனன். நான் மரணம் அடைகையில் இனி இவர்கள் எவ்விதமாக ஜீவிக்கப் போகின்றனர்? எவன் மிகவும் மூடனுகிச் சிறிதுந் தெளிவின்றி ஒரு பாணத்தினுல் என்னையும் கிழவர்களாகிய என தாய்தந்தைகளையும் ஆக மூவரையும் கொன்றுவிட்டனன்?" என்று மனுஷ்யவாக்யஞ் செவியிற்பட்டது. மிகவும் மனஇரக்கத்தை விளைவிக்கும்படியான அவ்வார்த்தையைக்கேட்டு நான் தர்மத்தில் ஆஸக்தியுடையவனுகையால் அதர்மஞ் செய்தோமேயென்று மனத்தில் பீடிக்கப்பட்டிருக்கையில் என் கைகளினின்றும் வில்லும் பாணமும் கீழே விழுந்துவிட்டன. ராத்ரி காலத்தில் அங்ஙனம் தீனமாகப் புலம்புகின்ற அந்த முனிகுமாரனது பல தீனவாக்யங்கள் செவிப்பட்டவுடனே தடுமாறி மிகுந்த சோகம் மேலெழப்பெற்று மதிமயங்கி இருந்தனன். இப்படி மிகவும் மனங்கலங்கப்பெற்றுச் சரீரத்திலும் பலம் குறைந்திருக்கிற நான் அவ்விடஞ்சென்று ஸரயூநதிக்கரையில் பாணத்தால் அடிக்கப்பட்டுக் கீழே விழுந்திருக்கிற முனியைக் கண்டனன். அவன் ஜடைமுடி அவிழ்ந்து ஜலக்குடம் உடைந்து புழுதியும் ரக்தமும் சரீரத்தில் படிந்து பாணத்தின் நுனியால் அடியுண்டு பீடிக்கப்பட்டுக் கீழே விழுந்திருந்தனன். அம்முனிகுமாரன் திகில்பட்டு மனங்கலங்கியிருக்கிற என்னைத் தனது தேஜஸ்ஸினுல் தஹிப்பவன்போல் இரண்டுகண்களாலும் க்ரூரமாக உற்றுப்பார்த்துப் பிறகு இங்ஙனம் பருஷமாகச் சொல்லத்தொடங்கினன். 'அரசனே! தாய்தந்தைகளுக்கு ஜலங்கொண்டுபோவதற்காக வந்த என்னை நீ பாணத்தினுல் அடித்தாயே. வனத்தில் வாஸஞ்செய்துகொண்டு காலத்தைக்கழிக்கின்றவனுகிய நான் உனக்கு யாது அபகாரஞ்செய்தனன்? எனது மர்மஸ்தானங்களில் ஒரு பாணத்தினுல அடிக்கையில் நான் செத்துப்போவது மாத்ரமேயன்றி வ

யது சென்றவர்களும் கண் தெரியாதவர்களுமாகிய என் தாய்தந்தைகளுங்கூடச் செத்துப்போய்விடுவார்களே! அவ்விருவரும் மிகவும் துர்ப்பலர்களாகி எழுந்திருக்கவும் முடியாதிருக்கின்றனர். மேலுங் குருடர்கள். அவர்கள் தபித்துக்கொண்டு நான் எப்பொழுது வருவேனோவென்று என்னை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். வெகுநேரம்வரையில் 'பாலகன் ஜலங்கொண்டுவருவான்' என்னும் ஆசையால் ஸஹிக்கமுடியாத தாஹத்தை அடக்கிக் கொண்டிருக்கப்போகிறார்கள். நான் இங்ஙனம் தரையில் விழுந்து பரிதபித்துக் கொண்டிருப்பது என் தந்தைக்குத் தெரியாதல்லவா? மிகத் தவஞ்செய்தும் கல்வியைக்கற்றும் தந்தைக்குங்கூடத் தெரியாமல் தரையில்விழுந்து படுத்திருக்கின்றேனே! ஆகையால் எவ்வளவு தவஞ்செய்தபோதிலும் எவ்வளவு கல்வியைக்கற்றபோதிலும் யாதும் பயன் இல்லை. நடக்கவுங்கூட முடியாத என் தந்தைக்கு நான் இங்ஙனம் விழுந்திருப்பது தெரிந்தபோதிலும் தாம் என் செய்யப்போகின்றனர்? காற்று முதலியவற்றால் ஒரு வ்ருக்ஷம் முறிக்கப்பட்டுக் கீழேவிழும்போது மற்றொருவ்ருக்ஷம் பக்கத்தில் பார்த்துக் கொண்டிருந்தபோதிலும் அதைக் காப்பாற்றமுடியுமா? முடியாது. ராகவனே! என் தந்தையிடம் நீயே சீக்ரமாகச்சென்று என் சங்கதியைச் சொல்வாயாக. அவர் அது கேட்டுக் காட்டுத்தீ வளர்ந்து அரண்யத்தைக் கொளுத்துவதுபோல், கோபித்துக் கொண்டு என்னைத் தஹித்துவிடுவாரோ என்று நீ நினைக்கவேண்டாம். அவர் அங்ஙனஞ்செய்யார். நீ சொல்லாத பக்ஷத்தில், அவர் வெகுநேரம் எதிர்பார்த்தும் என்னை வரக்காணாமல் கோபித்துத் தனது தேஜஸ்ஸினால் ஒருக்கால் தஹிக்கவுங்கூடும். இதோபோகின்ற ஒற்றைக்கால்வழியே நடந்து போவாயாயின், எனது தந்தையின் ஆச்ர

மத்திற்குப் போய்ச்சேருவாய். நீ அங்ஙனஞ்சென்று அவ ரைக் கலக்கந்தீரச் செய்வாயாக. அப்பொழுது கோபித் துக்கொண்டு உன்னைச் சபியாதிருப்பார். இல்லையாயின் தப்பாமல் சபித்துவிடுவார். மன்னவனே! என் சரீரத்தி லுள்ள பாணத்தைப் பிடுங்கி விடுவாயாக. ஜலப்ரவாஹம் உயர்ந்து மணற்குன்றாயிருப்பதுபற்றி மெதுவாயிருக்கிற கரையைக் கரைப்பதுபோல் இக்கூரான பாணமானது என் மர்மஸ்தானத்தைப் பீடிக்கின்றது' என்றனன். அது கேட்டவுடன் 'இம்முனிகுமாரன் பொத்தின பாணத் துடனே யிருப்பானாயின் பாதைப்படுவான், பாணத்தைப் பிடுங்கிவிடுவேனாயின் ப்ராணன்களைவிட்டுச் சாவான். ஆ கையால் இந்தப் பாணத்தைப் பிடுங்கலாமோ, கூடாதோ என்று அந்தப்பாணத்தைப் பிடுங்கும் விஷயத்தில் எனக் குள் சிந்தை உண்டாய்விட்டது. 'இப்படிப்பட்ட அகார் யஞ்செய்தேனே' என்று துக்கித்தவனாகி 'ப்ரஹ்மஹத் யை உண்டாகுமோ என்னவோ' என்று சோகத்தினால் பரிதபித்து மனத்தில் நான் சிந்தித்துக் கொண்டிருப்ப தை அம்முனிகுமாரன் தெரிந்துகொண்டனன். அவன் மிகவும் இளைப்புற்றுத் துடித்துப் பரிதபித்து உடம்பைத் திருப்பித் திருப்பித் தரையில்புரண்டு மரணகாலம் ஸமீ பிக்கப்பெற்று என்னைப்பார்த்து 'நான் தைர்யத்தினால் துக்கத்தை அடக்கி மனத்தை உறுதியாக நிலை நிறுத் திக் கொண்டிருக்கின்றனன். ஆகையால் நீயும் அப்படியே மனவருத்தப் படாதிருப்பாயாக. என்னை அடித்ததனால் ப்ரஹ்மஹத்யை ஸம்பவித்ததேயென்னும் ஸம்சயத்தை மனத்தினின்றும் துரத்திவிடுவாயாக. அரசனே! நான் ப்ராஹ்மணனல்லேன். அதற்காக நீ மனம் பரிதபிக்க வேண்டாம். நான் வைஶ்யனுக்குச் சூத்ரஸ்த்ரீயிடத்தில் பிறந்தவன்' என்றனன். அங்ஙனம் அவன் பாணத்தினால்

மர்மஸ்தானத்தில் அடிக்கப்பட்டு வருந்துவதனால் வார்த்தைசொல்ல முடியாமலிருந்து மிகவும் வருந்தப்பட்டு எனக்கு இவ்வார்த்தையைச் சொல்லி ஒருக்கால் தரையில் கடகடவென்று சுழன்றும் ஒருக்கால் கைகாலசையாமல் சேஷ்டையின்றி யிருந்தும் ஒருக்கால் நோயினால் உடம்பைச் சுருட்டிக்கொண்டிருந்தும் வருந்த முற்றிருக்கையில், அவனது சரீரத்தினின்றும் பாணத்தைப் பிடுங்கிப் போகட்டனன். அந்தத் தபோதனன் மிகவும் ஆயாஸப்பட்டு என்னைப் பார்த்துக்கொண்டே ப்ராணன்களை விட்டனன். நல்ல ஸ்வபாவமுடையவளே! மர்மத்தில் அடிக்கப்பட்டு மிகவும் வருந்திப் புலம்பி அனந்தரம் புலம்பவும் முடியாமல் ஓயாமல் பெருமூச்செறிந்துகொண்டு ஜலத்தினால் சரீரம் முழுவதும் நனையப்பெற்று ஸரயூநதியின் கரையில் தரையில் படுத்திருக்கிற அம்முனி குமாரனைப் பார்த்து மிகக மனவருத்தமுற்றேன்' என்றனன். அறுபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தசரதன் மரணமடைதல.

தர்மஸ்வபாவனாகிய அந்தத் தசரதன் அம்மஹர்ஷியை எவனும் செய்யாத வண்ணம் தான் அடித்ததுபற்றியே புலம்பிக்கொண்டு நடுநடுவில் ராமனை நினைத்துப் பிதற்றி மீளவும் கௌஸல்யையைப் பார்த்து அம்முனிகுமாரவதத்தையே சொல்லத் தொடங்கி அங்ஙனம் நான் தெரியாமல் அம் மஹா பாபத்தை நடத்தி அனந்தரம் மனக்கலக்கமுற்று, 'இனி எப்படி செய்தால் நன்மை உண்டாகும்?' என்று நானொருவனே புத்தியில் ஆலோசித்தனன். பிறகு அம்முனி குமாரன் சொல்லியபடி செய்வதே நலமென்று நிச்சயித்து கலக்கமில்லாத நல்ல ஜலம் நிரம்பிய அந்தக் குடத்தை எடுத்துக்கொண்டு அவன் சொன்ன வழி

யாகவே நடந்து சென்று அவ்வாஶ்ரமத்திற் சேர்ந்தனன். அங்கு துர்ப்பலர்களாகிக் கண்கள் தெரியாதவர்களும் தம்மைக் கைபிடித்து அழைத்துக்கொண்டு போவான் எவனுமில்லாமல் இறகொடிந்த பறவைகள் போன்றவர்களும் வயது முதிர்ந்தவர்களுமாகிய அவனது தாய் தந்தைகளைக் கண்டனன். அவர்கள் நடக்க முடியாதவர்களாகையால் ஒன்றுஞ் செய்ய முடியாமல் வெறுமனே பிள்ளையைப் பற்றிய அவ்வோ கதைகளைச் சொல்லிக்கொண்டு உட்கார்ந்து மற்றொரு ப்ரயத்னமும் செய்யமுடியாமல் திக்கற்றவர்கள்போல் இருந்தனர். என் நிமித்தமாக அவர்களுக்குப் புதல்வன் வருவானென்றாவது ஜலங் கொண்டு வருவானென்றாவது ஆசையும் இல்லாமற் போயிற்று. முதலில் அந்த ரிஷிகுமாரனை அடித்ததற்கே என் மனது சோகத்தினால் மிகவும் பரிதபித்துக் கொண்டிருந்தது. இப்படிப்பட்ட எனக்கு அவ்வாஶ்ரமஞ் சென்று அந்த வ்ருத்தர்களைப் பார்த்தவுடனே மேலும் சோகம் அதிகமாயிற்று. அம்முனிவர் என் காலடியைக் கேட்டவுடனே [1] 'என் குழந்தாய்! ஏன் இவ்வளவு தாமஸம்? சீக்ரமாய் ஜலங் கொண்டு வருவாயாக. என்னப்பா! நீ ஏதுக்காக இவ்வளவு நேரம் ஜலத்தில் விளையாடிக் கொண்டிருந்தாய்? சொல். இதோ உனது அன்னை உன்னை நினைத்துக்கொண்டு நீ வாராததைப் பற்றிப் பரிதபிக்கின்றனள். ஆஶ்ரமத்திற்குள் வேகமாய் நுழைந்து வருவாயாக. பிள்ளாய்! உன் தாயாவது நானாவது உனக்கு ஏதேனும்

---

1 இதற்கு— 'யந்நிமித்தமிஷம் தாத ஸலிலே க்ரீடிதம் த்வயா' என்று மூலம். இதற்கு 'யந்ந உத்தமிஷம் தாத' என்னும் பாடத்தில்— 'என்னப்பா! நீ இது வரையில் ஜலங் கொண்டு வந்து கொடாமையால் நீ ஜலத்தில் விளையாடிக்கொண்டிருந்தா யென்பது நிசசயம்' என்று பொருள்.

அப்ரியமோ அபராதமோ செய்திருப்போமாயின், நீ தபஸ்வியாகையால் அதை எள்ளளவும் மனத்திற் கொள்ளலாகாது. திக்கில்லாத எங்களுக்கு நீயே யன்றோ கதி. நடக்கக் கால்களில்லாத எங்களுக்கு நீயே நடை கொடுப்பவன். கண்களில்லாத எங்களுக்குக் கண்களும் நீயே. எங்கள் ப்ராணன்களும் உன்னிடத்திலேயே நிலை பெற்றிருக்கின்றன. நீ எங்களிடம் பேசாதிருப்பதேனோ?" என்றனன். நான் அம்முனியைப் பார்த்து மிகவும் பயந்து வார்த்தைகள் தழதழக்கவும் எழுத்துக்கள் மறையவும் பெற்று அஸ்பஷ்டமான வார்த்தையுடன் பேசத் தொடங்கி மனஸ்ஸை எங்கும் சலிக்கவொட்டாமல் நிலைப்படுத்திக் கைகால் முதலியவற்றின் சேஷ்டைகளையும் நிறுத்திவிட்டுத் தழதழத்த வார்த்தையையும் கஷ்டப்பட்டு ஸரிப்படுத்திக் கொண்டு அவர்க்குப் பயத்தை விளைக்கும்படியான புத்ரமரண விபத்தைச் சொல்ல முயன்று 'நான் க்ஷத்ரியன். எனக்குத் தசரதனென்று பேர். நான் மஹானுபாவராகிய உமது புதல்வனல்லேன். பூர்வத்தில் நான் செய்த கர்ம வசத்தினால் ஸத்புருஷர்கள் நிந்திக்கும்படியான இந்த வ்யஸனம் இப்போது நேர்ந்தது. மஹானுபாவரே! நான் நதியில் ஜலங் குடிக்குந் துறையில் வந்த ஏதாவது க்ரூர ஜந்துவையாவது யானையையாவது அடிக்கவிரும்பி வில்லுங் கையுமாக ஸரயூநதிக் கரைக்கு வந்தனன். பிறகு நான் உமது குமாரன் குடத்தில் ஜலம் மொள்ளும் சப்தத்தைச் செவியுற்றனன். அவனை, நான், 'அது யானையாயிருக்கும்' என்று நினைத்து அதைக் குறி வைத்து அடித்தனன். பிறகு நான் அந்தத் துறைக்குச் சென்று அங்கு என் பாணத்தினால் மார்பில் அடியுண்டு ப்ராணன் போனாற்போல் பூமியில் விழுந்திருக்கிற ஒரு தாபஸனைக் கண்டனன். மஹானுபாவரே! நான் சப்தத்தைக்

குறி செய்து யானையைக் கொல்ல முயன்று ஜலத்தில் பாணப்ரயோகஞ் செய்கையில், அந்தப் பாணத்தால் உமது புதல்வன் அடியுண்டனன். உடனே அவனருகிற் சென்று பாணவேதனையைப் பொறுக்க முடியாமல் பரிதபிக்கின்ற அந்தத் தாபஸகுமாரன் 'இந்தப் பாணத்தைப் பிடுங்கி விடுவாய்' என்றுரைக்கையில், அந்த வார்த்தையின்படியே அப்பொழுது உடனே அவனது மர்மஸ்தானத்தினின்றும் அந்தப் பாணத்தைப் பிடுங்கி விட்டனன். பாணத்தை எடுத்தவுடனே அம்முனி குமாரன் 'என் தாய் தந்தைகள் கண்ணில்லாதவர்களா யிருக்கின்றார்களே! இனி அவர்களை யாவர் போஷிப்பார்களோ!' என்று உங்களைக் குறித்துச் சோகித்துப் புலம்பிக்கொண்டே ஸ்வர்க்கஞ் சேர்ந்தனன். நான் அஜ்ஞானத்தினால் உமது புதல்வனைத் திடரென்று கொன்றுவிட்டேன். இங்ஙனம் நடந்து போயிற்று. இதற்கு மேல் சாபமோ, அனுக்ரஹமோ, ஏது செய்யவேண்டுமோ, அதை எனக்கு முனிவர் அருள் புரியவேண்டும்' என்றேன். மஹிமை பொருந்திய அந்த ரிஷி, நான் இங்ஙனம் அந்தத் துக்கத்தைத் தெரிவிக்கையில், க்ரூரமாகிய அந்த வார்த்தையைக் கேட்டு மேலெழுந்த மிகவும் தீவ்ரமாகிய வ்யஸனத்தை அடக்க வல்லராக வில்லை. மஹாதேஜஸ்வியாகிய அந்த மஹர்ஷி முகத்தில் கண்ணீர் வழியப் பெற்றுப் பெருமூச் செறிந்து சோகத்தினால் பரிதபித்துக் கைகளைக் கூப்பிக்கொண்டு எதிரில் நின்றுகொண்டிருக்கிற என்னைப் பார்த்து 'மன்னவனே! இவ்வசுபகார்யத்தை நீயே எனக்குச் சொல்லாமல் மற்றொருவிதமாக எனக்குத் தெரியுமாயின், உன் தலை இந்த க்ஷணத்திலேயே லக்ஷஞ் சுக்கலாகப் பிளந்து போயிருக்கும். அரசனே! பரிபாலனஞ் செய்பவனாகிய மன்னவன் தெரியாமல் வானப்ரஸ்தனை எவனையாயினும் அடிப்பானாயி'

அழியாத பாணங்களையுடைய அம்புறாத்தூணிகளையும் கொடுத்திருந்தனன். அவவில்லு மிகுந்த பளுவும் உறப்புமுடைய தாகையால ஸாதாரணமனுஷ்யர்களுக்கு எவ்வளவு கஷ்டப்பட்டபோதிலும் அதை அசைக்கவும்கூடச் சக்யமல்லாதிருந்தது. ஆகையால் அரசர்கள ஸ்வப்னத்திலாயினும் அதை வளைத்து நாணேற்ற வல்லராகவில்லை. அனந்தரம் ஸத்யவாதியாகிய என் தந்தை அரசர்களெல்லோரையும் வரவழைத்து அவர்கள் கூட்டத்திடையில அவவில்லைக் காட்டி 'எவன இவ்வில்லை மேலெடுத்து நாணேற்றுவானே அவனுக்கு என்புதல்வி பார்யையாவாள். இதற்கு ஸந்தேஹமில்லை' என்றனர். ராஜாகளெல்லோரும் உருவத்தில பர்வதம்போன்ற அவவில்லைப்பார்த்து அதை மேலதூக்கவும் முடியாமல் நமஸ்காரஞ்செய்து போயினர். அனந்தரம் வெகுகாலம் கடந்தபின்பு மஹாகாந்தியுடன விளங்கும் உண்மையான பராக்ரமமுடைய இந்த ராமன், தன் தம்பியாகிய லக்ஷ்மணனுடன் விஶ்வாமித்ரரை முன்னிட்டுக்கொண்டு யாகம்பார்க்க வந்தனன். தர்மஸ்பாவராகிய விஶ்வாமித்ரரும் என் தந்தையால் பூஜிக்கப்பட்டு அவரைப்பார்த்து 'அண்ணனுந் தம்பியுமாகிய இந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் தசரதசக்ரவர்த்தியின குமாரர்கள். உன்னிடமிருக்குந் தனுஸ்ஸைப்பார்க்க விரும்புகின்றனர். உனக்கு தேவதைகள் கொடுத்த அந்த வில்லை ராஜகுமாரனாகிய இந்த ராமனுக்குக் காட்டுவாயாக' என்றனர். ஜனகரும் அந்த ப்ராஹ்மணரது வார்த்தையைக் கேட்டு அவ்விலலை வரவழைத்துக் காட்டினர். ராமன் மிகுந்த வீர்யமுடையவனாகையால் ஒருநிமிஷப்பொழுதிலேயே மஹாஸாரம்பொருந்திய அவ்விலலை வளைத்து நாண்கயிற்றை ஏற்றிப் பூரித்தனன். ராமன் அங்ஙனம் பூரித்து நிற்கையில் அந்த தனுஸ்ஸு வேகம் பொறுககாமல்

இரண்டாகப் பிளந்தது. அதனால் இடிவீழ்ந்தாற்போல் பயங்கரமான ஓரொலி உண்டாயிற்று. அந்த ஸத்யப்ரதிஜ்ஞராகிய என தந்தை என்னை ராமனுக்குக் கொடுப்பதாக நிச்சயித்து ஜலகலசத்தை எடுத்துக்கொண்டனர். அப்பொழுது ஜனகர் என்னை ராமனுக்குத் தாரைவார்த்துக் கொடுக்கப புகுகையில் 'அயோத்யாதிபதியும் தனக்கு ப்ரபுவும் தந்தையுமாகிய தசரதனுடைய அபிப்ராயந் தெரியாமல் நான அங்கீகரிக்கமாட்டேன்' என்று ராகவன மொழிந்தனன. அனந்தரம் என் தந்தை வ்ருத்தராகிய என் மாமனார் தசரதமஹாராஜரை வரவழைத்து ஆத்மஜ்ஞனாகிய ராமனுக்கு என்னைக் கொடுத்தனர். இதுவேயன்றி, பதிவ்ரதையும் இனிய காட்சியுடையவளும் என் தங்கையுமாகிய ஊர்மிளையை லக்ஷ்மணனுக்குப் பார்யையாகக் கொடுத்தனர். அப்பொழுது அந்த ஸ்வயம்வரத்தில் இவ்விதமாக நான் ராமனுக்குக் கொடுக்கப்பட்டனன். நான் பராக்ரமசாலிகளில் தலைவனாகிய என் பர்த்தாவிடத்தில் தர்மத்தின்படி அனுராகமுண்டாகப் பெற்றிருக்கின்றேன' என்றனள். நூற்றுப்பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் அன்றிரவு அம்முனிவரது ஆஸ்ரமத்திலிருந்து விடியற்காலத்தில அப்பொழுது செய்யவேண்டிய சடங்குகளைத் தீர்த்துக்கொண்டு தண்டகாரணயத்திற்கு ப்ரயாணமாய்ப் போதல்.

தர்மங்களையறிந்த அனஸூயை அந்தப் பெருங்கதை முழுவதையுங் கேட்டு ஸீதையை உச்சிமோந்துக் கைகளால அணைத்துக் கட்டிக் கொண்டு அவளை நோக்கி அக்ஷரங்களும் பதங்களும் ஸ்பஷ்டமாக வியப்புறுவிக்கவல்ல இனிய உரைகளைக் கூறினை. ஸ்வயம்வரத்தையும் நடந்தபடி

முழுவதும் கேட்டனன். மதுரமாகப் பேசுந்தன்மையளே! உன் கதையைக் கேட்டு நான் மிகவும் ஸந்தோஷிக்கின்றனன். பேரொளியனாகிய ஸூர்யன் இரவு கிட்டப்பெற்று அஸ்தமித்தனன். ஆஹாரத்திற்காகப் பக்ஷிகள் பகலெல்லாந் திரிந்து ஸந்த்யாகாலத்தில் நித்ரிக்கும்பொருட்டு வ்ருக்ஷங்களில் அடங்கிக் கலகலவென்று செய்யும் த்வனி செவிப்படுகின்றது. இதோ இம்முனிவர்கள் ஸாயங்கால ஸ்நானஞ்செய்து நனைந்து ஜலகலசங்களை எடுத்துக்கொண்டு நீரில் நனைந்த மரவுரிகளுடன் குவியற்குவியலாக வருகின்றனர்! ரிஷிகள் அக்னியை வளர்த்தி விதிப்படி ஹோமங்களைச் செய்கையில் புறாவின் கண்டம்போல் கொஞ்சம் சிவந்திருக்கின்ற தூமமானது காற்றால் கலைக்கப்பட்டுப் புலப்படுகின்றது. திசைகள் ஸ்பஷ்டமாகத் தெரியாதிருக்கின்றன. ஆகையால் இவ்விடத்திற்கு தூரத்திலிருக்கிற இலையுதிர்ந்த வ்ருக்ஷங்களும் இலைகளடர்ந்தாற் போலவும் அருகிலிருப்பன போலவும் புலப்படுகின்றன. இரவில் திரியும் ஜந்துக்கள் நாற்புறமும் திரியத்தொடங்குகின்றன. இந்தத் தபோவனத்திலுள்ள ம்ருகங்களும் அக்னிவேதிகளின் ஓரங்களில் படுக்கின்றனபார். ஸீதே! ராத்ரியும் நக்ஷத்ரங்கள் விளங்கப் பெற்று வளர்ந்து வந்தது. சந்த்ரனும் உதயமாகி நிலவென்னும் போர்வையைப் போர்த்துக்கொண்டு ஆகாயத்தில் புலப்படுகின்றனன். ஆகையால் நீ இனிப்போய் ராமனுடன் கூடி இருப்பாயாக. நான் அநுமதி கொடுக்கின்றேன். நீ இனிதாகக் கதைகள் சொல்லக்கேட்டுநான் மிகவும் ஸந்தோஷமுற்றனன். ஸீதே! நீ என் கண்முன்னமே அலங்காரஞ் செய்துகொள்வாயாக. திவ்யாலங்காரங்களால் அழகு விளங்கப் பெற்று எனக்கு மனக்களிப்பை விளைப்பாயாக' என்றனள். தேவகன்னிகைபோல் ஸீதையும் அப்படி

யே நன்கு அலங்காரஞ் செய்துகொண்டு அவ்வனஸூயை க்கு ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து ராமனிடம் போயினள். பேசுபவர்களில் வல்லவனுகிய ராமனும் அங்ஙனம் அலங்கரித்துக்கொண்டுவந்த ஸீதையைப் பார்த்து அந்தத் தாபஸி செய்த ப்ரீதிதானத்திற்கு மிகவும் ஸந்தோஷித்தனன். பிறகு ஸீதாதேவி, தபஸ்விநியாகிய அனஸூயை தனக்கு ப்ரீதியுடன் ஆடையாபரணங்களையும் புஷ்பமாலைகளையுங் கொடுத்தது முதலான வருத்தாந்தத்தை யெல்லாம் ராமனுக்குத் தெரிவித்தனள். மனிதர்களில் எவர்க்கும் பெறக்கூடாத ஸத்காரம் ஸீதைக்குண்டானது கண்டு ராமனும் மஹாரதனுகிய லக்ஷ்மணனும் மிகவும் ஸந்தோஷித்தனர். அனந்தரம் சந்த்ரனைப் போன்ற முகமுடைய ராகவன் தபஸ்விநியுடைய ரிஷிகளால் பூஜிக்கப்பட்டுப் பெரும் ப்ரீதியுடன் பரிசுத்தமாகிய அன்றிரவெல்லாம் அங்கே யிருந்தனன். அன்றிரவு கீடந்தபின்பு விடியற்காலத்தில் ஸ்நானஞ் செய்து ஹோமாதிகளை நிறைவேற்றிக் கொள்கையில் புருஷஶ்ரேஷ்டர்களாகிய ராமலக்ஷ்மணர்கள் அவர்களிடஞ் சென்று 'போய் வருகிறோம்' என்றனர். தர்மானுஷ்டானத்தில் நிலைநின்றவர்களும் வனசாரிகளுமாகிய அம் முனிவர்கள் அந்த ராமலக்ஷ்மணர்களைப் பார்த்து அவ் வனத்திலுண்டாகும் ராக்ஷஸபாதையைச் சொல்லத்தொடங்கி 'ராமா! இம் மஹாரண்யத்தில் புருஷர்களைத் தின்னுந் தன்மையர்களும் பலவகை உருவங்கொள்ள வல்லவர்களுமாகிய ராக்ஷஸர்கள் இருக்கின்றனர். ரத்தத்தையே ஆஹாரமாகவுடைய க்ரூரம்ருகங்களும் பல இருக்கின்றன. ராமா! இம் மஹாரண்யத்தில் ராக்ஷஸர்கள் சேர்ந்து முனிவர்களை அசுசிகளா யிருக்கும்பொழுதும் பராக்கடித்திருக்கும்பொழுதும் பிடித்துப் பக்ஷிக்கின்றனர். ராமா! மஹர்ஷிகள்

அரண்யத்திலுள்ள பழம் முதலியவற்றைக் கொண்டு வரப் போய் வரும் மார்க்கம் இது. நீ இவ்வழியாகவே புகக்கூடாத வனத்தில் ப்ரவேசிப்பது யுக்தம்' என்றனர். சத்ருக்களை வெல்ல வல்லனாகிய அந்த ராமன் இங்ஙனம் அம் முனிவர்கள் வணக்கத்துடன் ப்ரார்த்தித்துச் செய்யும் மங்கலாசரணங்களைக் கைப்பற்றி ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் கூட ஸூர்யன் மேகமண்டலத்தில் ப்ரவேசிக்குமாறு தண்டகாரண்யத்தில் ப்ரவேசித்தனன்.

நூற்றுப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

அயோத்யாகாண்டமும்

முற்றுப்பெற்றது.

ஸ்ரீஸீதாஸமேத ஸ்ரீராமசந்த்ராய பரப்ரஹ்மணே நம:.

